உ

சிவமயம்.





# சுசிந்தை மான்மியம்.

ஆக்கியோர்

**மா. சிதம்பரகுற்ருலம் பிள்ளை,**

தமிழ் வித்வான்,

ஆளூர்.

நாகர்கோவில்,

தென் இந்தியா அச்சுநிலையத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1115

 [விலை அணு 8.

உ

சிவமயம்



சிவதாணு நாதர் திருவடிகளே துணை.

## அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்.

திருவளருஞ் சுசிந்தைநகர்ச் சிவதாணு நாதனென்னுந்
தேவ தேவன்
மருவளரும் மலரடிகள் மறவாத மனமுடையார்
மாண்பென் சொல்வாம்
கருவளரும் பிறப்பொழிப்போன் கருணைமிகு திருவுருவைக்
கண்ட போதே
அருள்வளரும் அகங்குழைக்கும் அன்புதரும் இன்புருவம்
ஆக்கும் என்னின். (1)

## எழுசீர் ஆசிரிய விருத்தம்.

மாயனும் அயனும் அரனுமோ ருருவாய்
மன்னிய முழுமுதற் பொருளாய்
தூயதென் சுசிந்தைக் கொன்றைநன் னிழற்கீழ்த்
தோன்றிய சிவபரஞ் சுடராய்
சேயெனும் உலகோர் வணங்கவுள் ளிரங்கித்
திருவருள் புரிந்தினி தீன்ற
தாயென விளங்குந் தாணுநந் நாதர்
சரணமக் கோரர ணாமே. (2)

---

# இப்புத்தகத்தில் அடங்கியவை.



# சுசீந்தைப் பிரபந்தத்தில் அடங்கிய விஷயங்கள்.

## சாற்று கவிகள்.

திருவனந்தபுரம் மாதர்கலாசாலையில் தமிழ்ப் பண்டிதராக இருந்து, தற்போது உபகாரச் சம்பளம் பெற்று வரும், புற்றேரியூர் திருவாளர் தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள் இயற்றியது.

### நேரிசை வெண்பா.

பத்திச் சுவைகண்டேன் பாவின் நயமறிந்தேன்
சித்தத் தெளிவுந் தெரிந்துகொண்டேன்—நித்தம்
சிதம்பரகுற் றாலநண்பா தென்சுசிந்தை அண்ணல்
பதம்பரவு நின்றமிழின் பால். (1)

மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவருளொருவரும் மகாமதி சதாவதானியும் இந்நூலாசிரியருக்கு இலக்கணவாசிரியரும் ஆகிய கோட்டாறு ம-ா-ா-ஸ்ரீ கா. ப. செய்குத்தம்பிப் பாவலர் அவர்கள் இயற்றியது.

### அறுசீர்க் கழி நெடிலாசிரிய விருத்தம்.

நாவார வமரேசன் நனிபுகழ்ந்து பழியொழிந்த
ஞான கானத்
தாவாருஞ் சுசிந்தைவளர் சிவ்நாணு மாலயர்க்கே
தமிழ்சே ரின்பப்
பாவாரு மொருநான்கு பிரபந்தம் பரிந்தளித்துப்
பயனே பெற்றான்
காவாரு மாளூர்வாழ் சிதம்பரகுற் றாலனெனும்
கவிவல் லோனே. (2)

குளச்செய் V. M. பாடசாலைத் தலைமையாசிரியராகிய வித்வான் இ. பகவதிப்பெருமாள் பிள்ளை யவர்களியற்றியது.

தாணு புருடச் சகம்நீக்கி யின்பளிக்கும்
தாணுபுகழ் சாற்றுந் தமிழ்நோக்கின்—மாணும்
சிதம்பரகுற் றாலனிதைச் செந்தமிழாற் செய்தான்
சிதம்பரமெய்ச் செம்பொருட்டேன் தேர்ந்து. (3)

கோட்டாறு ம-া-া-ஸ்ரீ கா. ப. செய்குத்தம்பிப் பாவலர் அவர்கள் மாணுக்கருள் ளொருவரான தமிழ் வித்வான் பறக்கைத் திருவாளர் தா. மாணிக்கவாசகம் பிள்ளை அவர்கள் இயற்றியது.

## எண்சீர் ஆசிரிய விருத்தம்.

பவமகற்றும் தென்சுசிந்தைப் பதியமையும் மகிமைப்
பலமாதங் களிற்றனுவின் பண்பமையும் மகிமை
தவமுனுற்றும் ஆதிரைசேர் தனிமகிமை யாவும்
தான்பலநூல் கண்டறிந்து சாற்றுபிர பந்தம்
அவமகற்றும் கற்ருேரின் அகங்களிக்கச் செய்தோன்
அருளுடையோர் தங்குமெழில் ஆளூரில் என்றும்
சிவமலதோர் கடவுளிலே யெனுமரபைச் சேர்ந்தோன்
சிதம்பரகுற் றுலனெனுந் திருப்பெயர்கொண் டோனே. (4)

சுசிந்திரம் சந்நதித்தெருவிலிருக்கும் தசாவதானம் திருவாளர் ஆறுமுகம் பிள்ளையவர்கள் இயற்றியது.

## கட்டளைக் கலித்துறை.

சீரார் சிதம்பர குற்றால மாங்கவிச் செம்மல்செய்த
பாரார் சுசிந்தைப் பிரபந்தம் நான்கையும் பார்த்துணர்ந்தேன்
நாராரும் அன்பின் பெருக்கமுஞ் செய்யுள்செய் நாநலமும்
நேராகக் கண்டறிந் தேன்மகிழ்ந் தேன்மனம் நெக்குறவே. (5)

பத்மநாபபுரம் தமிழ்ப்பண்டிதரும் வித்வானுமாகிய திருவாளர் இராமசுப்பிரமணிய நாவலர் அவர்கள் இயற்றிய

## வெண்பா.

அணியா ரரனுட் சிறப்பெடுத் தாய்ந்திங்
கணியாச் சிதம்பரகுற் றால— மணியுட்
கசிந்தையப் பாடு கழல வுரைத்தான்
சுசிந்தைப்ர பந்தந் தொகுத்து. (6)

திங்களிடை மார்கழியின் சிறப்புமதன் கண்முருகு
திகழ்சி றப்பும்
திங்களணி யீசனரு ளந்தாதி யெனுமிந்நூல்
செப்பி யுள்ளத்
திங்களவி லன்புறவ ரும்புலவர்க் கோர்விருந்தாய்த்
தியற்றி ஞனோர்
திங்களிறைக் கேற்றதென வெம்மனையார்க் கிதுவிருந்தாய்த்
திகழு மாதோ. (7)

நாகர்கோயில் தமிழ் உயர்தரப் பாடசாலைத் தமிழாசிரியர்
வித்வான் C. சதாசிவன் பிள்ளை அவர்கள் எழுதியது.

கட்டளைக் கலித்துறை.

சிந்தையின் மாணடி சேர்த்தின ருக்குத் திருவருளாம்
சிந்தையின் பாயுவந் தீந்தருள் மும்முதல் சேர்ந்துறைசு
சிந்தையின் மான்மியம் செய்தளித் தான்பத்தி சேரகங்க
சிந்தையின் ஞளூர்ச் சிதம்பர குற்றாலச் செம்மல்நன்றே. (8)

ஆரல்வாய்மொழி தமிழ் நடுத்தரப் பாடசாலைத் தலைமை
ஆசிரியர் ஆர். பத்மநாப பிள்ளை அவர்கள் இயற்றியது.

பாரிலுள்ள மக்களெல்லாம் பக்தியுட னேத்துவது
சீரியதோர் தாணுலிங்கத் தேவாகும்— தேரின்
சிதம்பர குற்றாலன் செய்தளித்த செந்நூல்
இதம்தரும் நம்மவர்க் கின்று. (9)

கோட்டாறு மகாமதி சதாவதானம் கா. ப. செய்குத்தம்பிப்
பாவலர் அவர்கள் மாணுக்கர் கொட்டாரம் பாலகவி
ஆர். எ. பிரமஞயகம் பிள்ளை அவர்கள் எழுதியது.

சாற்றற் கரிய வளனரும் தக்கோர் மாறு ஆளூரிற்
போற்றற் குரிய தவநெறியைப் பூண்டு மகிழ்வோ டுறைந்திலகும்
மாற்ற மறியா மாணிக்க வாசன் செய்த மாதவத்தால்
ஏற்ற முடைய தமிழ்ப்புலமை இசைவாய்த் திகையப்
பெற்றுதித்தே. (10)

பெற்ற நிதியும் புறக்கூட்டும்
பிரியுங் காலம் வருமென்றே
யுற்ற சுசிந்தைப் பிரபந்த
மோடு சுசிந்தை மான்மியமும்
முற்றச் சுவைக்கச் செய்தளித்து
மொய்க்கும் புகழை மிகப்படைக்கப்
பெற்ற கவிஞன் சிதம்பரகுற்
றால னென்னும் பெரியவனே. (11)

இலட்சுமிபுரம் தமிழ்ப் பண்டிதராகிய திருவாளர் M. அரிதாச
வாய்திரியார் அவர்கள் இயற்றியது.

## அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

தார்மேவும் செஞ்சடிலச் சிவதாணு மாலயன்பொற்
றூளை வாழ்த்திச்
சீர்மேவும் ஆளூர்வாழ் சிதம்பரகுற் றாலவள்ளல்
சிறப்பாய்ச் செய்த
பேர்மேவும் வண்சுசிந்தைப் பிரபந்தந் தமிழ்முகிலாய்ப்
பிறங்கி மேலும்
நேர்மேவும் தொண்டருக்கோ ரமிழ்தாகு மிதன்பெருமை
நிகழ்த்தற் பாற்றே. (12)

திருநெல்வேலி ஜில்லா கோயில்பட்டித் தாலூகாவைச்சேர்ந்த
சந்திரகிரி ஸ்கூல் மாஸ்டர் திருவாளர் M. சிவசுப்பிரமணிய
பிள்ளை அவர்கள் இயற்றியது.

## அறுசீர்க்கழிநெடில் ஆசிரிய விருத்தம்.

இதம்பெறுநல் லருள்புரிய வீசன்மா லயன்வடிவா
யெழுந்த மூர்த்தி
பதம்பெறநல் லடியவர்கள் தினம்பரவும் சுசிந்திரமான்
மியத்தைப் பண்டு
சிதம்பெறுபாற் கடல்கடைந்து பகவரமு தளித்ததுபோற்
றிருவா ளூர்வாழ்
சிதம்பரகுற் றாலமேனும் மாலமுதாய்ச் செய்ததிறன்
செப்பற் பாற்றே. (13)

திருநெல்வேலி தமிழ்ப்பேரறிஞர் உயர்திரு.
கா. சுப்பிரமணியபிள்ளை M. A. M. L. அவர்கள் கூறிய

# மதிப்புரை.

சைவத் திருவாளர் சிதம்பரகுற்றாலம் பிள்ளை அவர்கள் இயற்றிய **சுசீந்தை மான்மியமும்,** சுசிந்தைப் பிரபந்தமாகிய **மார்கழி மதிமாண்பு, மார்கழித் திருவிழா மாண்பு, சிவ தாணு வந்தாதி** என்னும் மூன்று பிரபந்தங்களும், இனிய எளிய செய்யுள் நடையால் நன்கமைந்திருக்கின்றன.

1. சுசிந்தை மான்மியமானது இக்கோயிலின் வரலாறும் பண்டைகாலத்து மூவேந்தர் திருப்பணிகளைக் குறித்த கல்வெட்டுக்களின் தக்க ஆதரவும், மலைநாட்டு மன்னர்களின் திருப்பணிச்சிறப்பும் நன்முய் விளங்குமாறு அழகாயமைந்திருக்கிறது.

2. மார்கழிமதிமாண்பானது, மார்கழி நீராட்டின் சிறப்பும், திருவாதிரை மகிமையும், விளக்கும் வழியாய், சமயகுரவர் அதன் சார்பாய்க்கூறியுள்ள கருத்துக்கள் இனிது விளக்கப்பட்டிருக்கிறது.

3. மார்கழித் திருவிழா மாண்பெனும் பகுதியானது, இத்திருவிழாச் சிறப்பும், இதன் உட்கிடப்பும், ஊர்திகளின் தத்துவக்கருத்தும் எடுத்து நன்கு விளம்புவது.

4. சிவதாணு வந்தாதியானது தாணுமூர்த்தியின் தனிச்சால்பை விளக்கும் முறையாய், அப்பெருமான் திருவருளை வேண்டி நிற்றலைக் குறிப்பது.

சுசீந்திரத்தின் பெருமை முற்றிலும் அறிவதற்கு இப்பிரபந்தத்தொகுதியானது பெருந்துணை புரிதலின், அம் மகிமைகளை அறியவிரும்பும் தமிழ் மக்களும், சைவநன் மக்கள் யாவரும் இதனை வாங்கி வாசித்து பயன்பெறும் கடப்பாடுடையர்.

---

ஆளூர். திருவாளர் ஆர். சிவசங்கரப்பிள்ளை அவர்கள் எழுதிய

# மதிப்புரை.

பரத கண்டத்தில் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் முப்பெருமைகளும் ஒருங்கே யமையப்பெற்ற சிவதலங்கள் பலவுள. அவற்றுள் நம் சுசிந்திரமும் ஒன்று. எனினும், தேவேந்திரன் நாடோறும் வந்து இரவு அர்த்தயாமப்பூசை செய்யும் தலம் வேறெதுவுமில்லை. தென்கயிலாயமென்னும் இவ்வாலயத்தின் சிறப்பைப் பலரும் பிரபந்தங்களால் பாடியிருக்கின்றனர். பண்டிதர்க்கன்றி படிக்கவியலாத தலபுராணமும் ஒன்றுளது. இத்தலத்தின் பெருமையை அறிந்து எல்லோரும் வழிபட்டு முத்தி பெறுமாறு ஆளூர் திருவாளர் சிதம்பரகுற்றாலம் பிள்ளை யவர்கள் சுசிந்தை மான்மியம் என்னும் அரிய நூலொன்றியற்றியுள்ளார்கள். இந்நூலின்கண் இக்கோயிலின் சிறப்பும், மார்கழி மதிமாண்பும், மார்கழித் திருவிழா மாண்பும், சிவதாணு அந்தாதியும் இவ்வாலயத்தைப் பற்றிய கல்வெட்டுகள் பலவும் செய்யுளும் வசனமுமாக அமைத்திருக்கின்றனர்.

பக்திகுறைந்து ஆலய தரிசனத்தில் வெறுப்புக்கொண்டவர்களும் இந்நூலைப் படித்தால் விரைவில் மனமாற்றமடைந்து தாணுநாதன் திருவருளைப்பெறுவர். இறைவன் என்றும் விளங்குகின்றான் என்பதற்கு குற்றம் செய்தோர் இங்கு நெய்யில் கை முக்கிச் சத்தியம் செய்வதாலறியலாம். மும் மூர்த்திகளும் தானே என்பது தாணுமாலயப்பெருமாளாய் விளங்குவதாலறிக. இங்கு சைவ வைணவச் சண்டையின்றி சமரசமாய் யாவரும் வணங்குகின்றனர். இக்கோயிலில் ஓர் சிறு வழிபாடு செய்தால் சிவபெருமான் அருள்புரிவாரென்றால் ஞானதானமாகிய சுசிந்தை தலமான்மியமளித்த பிள்ளையவர்களுக்கு எல்லாவித அருளும் புரிவாரென்று கூறவும் வேண்டுமோ?

எமது நண்பர் தெங்கம்புதூர் தா. சாத்தாங்குட்டிப் பிள்ளை
அவர்கள் பாடிய

## சிறப்புப்பாயிரம்.

---

மலருறையுந் திசைமுகனு மவனையுந்தி வழிபயந்த
மாலும் வானும்
நிலமுழுறப் புகுந்திளைத்து நிதந்தேடச் சுசிந்தையெனும்
நிலத்தோர் போற்றுந்
தலமுறையும் பெருங்கருணைச் சிவதாணு நாதனிரு
சரணுக் கன்பால்
குலவுதமிழ் மான்மியநூ லெந்நலனும் பொலிந்திலங்கக்
கூறி னுனல்.

அன்னவன்று னியாவனெனி லருந்தமிழ்நூ லொருங்குணர்ந்த
அறிஞ னுளர்
மன்னுதவ வடிவானேன் மாணிக்க வாசகப்பேர்
மருவு மாண்போன்
துன்னுதவத் தாலுதித்த சொல்லரிய குணநலத்தான்
தூய்மை யாளன்
என்னரிய நட்பாளன் சிதம்பரகுற் றுலனெனும்
மிசை மிக்கோனே.

ஆய்ந்துரைக்கு மிப்பெரியோ னுக்குதமிழ் நூற்பெருமை
யளக்கற் பாற்றே
வாய்ந்தபுவி வருமெவர்க்கும் மனமாசு நீக்கியருள்
வளர்தெதைப் பேறும்
தோய்ந்தபல நலம்படைத்துத் தோலாத சுகமளித்துத்
துவாத சாந்த
மேய்ந்தபெரு வீடளிக்கு மீதுண்மை யான்வேறிங்
கிசைப்ப தேன்னே.



இந்நூலில் யாத்த செய்யுட்கள் சொன்னயமும், பொருணயமும் செறிந்தன. அவற்றின் சிறப்பை யெடுத்துக் கூறப் போதிய விடமில்லையாதலால் விரிவஞ்சிவிடுத்தேன்.

இந்நூலாசிரியர் தமிழ்ப் புலவரும், வேதாந்த சித்தாந்த தர்க்க சாஸ்திரங்கள் நன்கு கற்றவரும் ஆவர். நாங்கள் இருவரும் சேர்ந்து நீண்டநாள் நூற்கள் ஆராய்ச்சி செய்ததுமுண்டு. அன்றியும், எனது உழுவலன்பருமாவர்.

இந்துமதத்தைச்சார்ந்த யாவரும் இதனை வாங்கி வாசித்துத் தாணுநாதன் திருவருள் பெறுவாராக. எல்லா நலன்களும் பிள்ளையவர்கட்கு அளிக்கும் பொருட்டு முழுமுதற் கடவுளாகிய சுசிந்தை நாதனை வணங்குகின்றேன்.

"ஆணவத் தோடத்துவித மானநீ மெஞ்ஞானத்
தாணுவினேடத்துவிதம் சாரும் நாளெந் நாளோ?
(தாயுமானவர்)

---

# முகவுரை.

திருச்சுசிந்தை மான்மியம் என்னும் இந்நூலில் 8-மகிமைகளுள்ளன. அவற்றுள் முதலாறு மகிமைகளில், சுசிந்தையாலயந்தோன்றிய மாண்பும், இவ்வாலயத்தின் அத்திரியாதி முனிவர்களும், இந்திரனும் பூஜித்துப்பேறுபெற்ற முறைகளும் விளங்குவனவாம். 7-வது மூவேந்தர் பூஜித்த மகிமையில், தமிழ்நாடாண்ட சேரசோழ பாண்டியர்முதற் பலவரசர்கள் இச்சுசிந்தையாலயத்திற் பல திருப்பணிகளியற்றியுள்ளாரெனக் கூறப்படுகிறது. இதிற் சில வரசர்களியற்றிய திருப்பணிகள் இன்னகாலத்தென்று, சிலாசாஸனங்களினுதவியால் விளக்கியும், முடியுடைமூவேந்தர் இயற்றிய பணிகளைக் காலவரையறையின்றியும் கூறினோம். பண்டைக்காலத்துள்ள அம்மூம்மன்னர் காலம் தெரிவது மிகவரிது, ஏனினும் இங்கு சிறிது ஆராய்வாம்.

முத்தமிழ்க்கவிராயர் இயற்றிய சுசீந்திரத்தல புராணத்தில் மும்மூர்த்தியுருவாகிய தாணுநாதராலயமும், திருக்கொன்றையடியாலயமும், தோன்றிய மாண்பும், இவ்விரண்டாலயங்களில் தேவர், முனிவர், மூவேந்தராதியோர் பணிந்து பெரும்பேறு பெற்றமையாதிகளும் கூறப்படுகின்றன. சுசிந்தையாலயத்துள்த் தெற்கிடத்துப் பெருமாளாலயத்தினைக் குறித்துயாதுங் கூறக்காணோம். ஆதலின், பண்டைக்காலத்து விளங்கிய அம்மூவேந்தர் பணிந்த வப்புராதன காலத்தில் அவ்விரண்டு மூலவாலயங்களேயிருந்தன வெனவும், பெருமாளாலயமும் சுற்றுப்புற வாலயங்களும் அம்மன்னர்களின் பிற்காலத்தவர்களால் இயற்றப்பெற்றனவெனவுமாம். அப்பிற்காலத்தவரும் பெருமாளாலயமாதி திருப்பணிகளை இன்னகாலத்தில் இயற்றினர் என்றறிதற்கு ஆதாரமின்மையால் முடியுடை மூவேந்தரின் வழிவந்தோரிற் சிலர் இவ்வாலயத்தியற்றிய

திருப்பணிகளைக் குறிக்கப்பெற்ற சிலாசாஸனங்களைக்கொண்டு அன்னோர் அத்திருப்பணிஇயற்றிய காலத்தை யொருவாறு காணத்தகும். இராஜேந்திரச் சோழனது சிலாசாஸனம் பெருமாளாலயத்தின் மேல்பாற் கற்சுவரிற் காணப்படுகிறது. இதில் இவ்வரசனியற்றிய திருப்பணியின்னதெனக் காணு திருப்பினும், 1100–ஆண்டுகட்கு முற்பட்ட காலமும், அன்னோன் பெயரும் தெளிவாய்க் காணப்படுவதால் அச்சோழ மன்னர்க்கு முற்பட்டகாலத்தில் பெருமாளாலயம் விளங்குவதாய் அறிதற்கிடமாகிறது.

சேரன் செங்குட்டுவன் என்னும் நூலெழுதிய இராமநாதபுரம், திரு. மு. இராகவையங்கார் அவர்கள், தமது நூலில், வஞ்சிநகரைத் தலைநகராய்க் கொண்டு ஆட்சிபுரிந்த சேரமன்னரிற், செங்குட்டுவனெனும்சேரர்பிரான் காலத்தினை ஆராயப்புகுந்து, மதுரைக் கடைச்சங்கத்திலக்கிய நூற்களையும், அந்நூற்களியற்றிய புலவர்களையும், அப்புலவர்களாற் புகழ்ந்து பாடப்பெற்ற அரசர்களையும் ஆய்ந்து 5-ஆவது நூற்றாண்டெனக் கூறுகிறார். இவர் கூற்றை மறுத்து, 2–ஆவது நூற்றாண்டேயெனப் பல காரணங்களால் வற்புறுத்தித் திரு கனகஸபைப் பிள்ளையவர்கள் கூறுகிறார். இதனை ஆராய்ச்சியோர் பலரும் ஒப்புக்கொள்கின்றனர். சேரநாடாகிய இந்நாடு வஞ்சிநாடெனவும், இந்நாட்டினை ஆள்வோர் வஞ்சிபூபாலரெனவும், இந்நாளும் வழங்கிவருவது இங்கு கவனிக்கற்பாலது.

2–ஆவது நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த அச்செங்குட்டுவச் சேரர்பிரான் காலத்திற்கு 5 நூற்றாண்டுகட்கு பிற்பட்டதும், இற்றைக்கு 1200 ஆண்டுகட்கு முற்பட்டதுமாகிய காலத்தில் ஆட்சிபுரிந்த சேரசோழபாண்டியர்கள் சுசிந்தையிற் பெருமாளாலயமாதி திருப்பணிகளியற்றிய காலமெனக் கூறலாம். சுசிந்தையாலயம் முதலுகத்திற்றோன்றியதெனப் புராணங் கூறுகிறது. இக்கூற்றைச் சரித்திரவாராய்ச்சியோர் ஒவ்வாரெனினும், முடியுடைமூவேந்தர் வழிவந்தோர் இவ்வாலயத்

துள் பெருமாளாலயமாதிகளியற்றிப் பன்னிருநூற்றுண்டு களாமெனின் 11 நூற்றுண்டுகட்கு முற்பட்ட சிலாசாஸனங்கள் இங்கு காணப்பெறுமெனின், இச்சுசிந்தையாலயத்தின் பழமையும் பெருமையும் நன்கறியத் தக்கனவேயாம்.

இவ்வாராய்ச்சியை வலியுறுத்துவது 17—10—1108-ல் வெளிவந்த திருவிதாங்கூர் ஸற்கார், 42-ம் நம்பர் கெஸற்றில 11 முதல் 13 வரையுள்ள பக்கங்களிற்கூறியுள்ள கோதகேரள வர்ம்மரென்ற வேணுட்டடிகளது சுசீந்திரச் சிலாசாஸனமாம். இச்சாஸனம் கொல்லம் ஆண்டு (320-ல்) எழுதப்பெற்றது. இதன் தலையங்கத்திற் கூறியிருந்த விஷயங்கள் இந்நூலிற் கூறப்படும் பற்பல கருத்துக்களையொத்துயிருத்தலின், அவற்றையிங்குரைப்பதும் இன்றியமையாதனயெனவே, மலையாள மொழியிற் கூறப்பெற்ற அவ்விஷயங்களைத் தமிழ்மொழிப் படுத்தி யிங்குரைப்பாம்.

திருவிதாங்கூரின் மிகப் பழமையானவாலயங்களிற் பல காரணங்களாலும் தலைமையுற்றிலகுவது, சுசீந்திரத்துத் தாணுநாதஸ்வாமியாலயமே. இவ்வாலயத்தின் வடக்கிடத்தில் தாணுநாதனாகிய சிவமூர்த்தியும்; தெற்கிடத்தில் பெருமாளாகிய விஷ்ணுமூர்த்தியுமாவார். தெற்கிடத்தாலயத்தின் மேல்பாற் கற்சுவரின் இராஜேந்திரச்சோழனது சிலாசாஸனம் காணப்படுவதால் இவ்வாலயமும் பழமையானதே. மிகப் பழமையானதோடு கைத்தொழிலின் நுட்பமாகிய சிற்ப வேலைகள் புராதனவடையாளங்கள், பூஜைமுறைகள் முதலானவைகளாலும் இச்சுசிந்தையாலயம், இந்நாட்டின் கண்ணுள்ள கோயில்களிலெல்லாம் சாலப்பெரும்புகழுடையதே. 1100 ஆண்டுகட்கு முற்பட்ட சிலாசாஸனங்களும் சிற்சில அடையாளங்களும் இங்கு காணப்படுகின்றன. மும்மூர்த்தி யுருவனாகிய சுசிந்தை யீசனைத் தேவேந்திரன் பூஜித்துச் சுசியடைந்தமையாற் சுசீந்திரமெனப் பெயர் பெற்றதென்று ஐதீகம். இந்நாளினும் அர்த்தயாமத்தில் அவ்விந்திரன் பூஜித்து

வருகின்றானெனப் பலமுதியோர் கூறிவருகின்றனர். இவ்வாலயத்துள் கைமுக்குமிகமாண்புற்றிருந்தது. கைமுக்கென்பது, கேரளப்பார்ப்பார்களில் குற்றமுடையோனென்று சந்தேகமுடையவர்கள், இங்குள்ள மணிமண்டபத்திற்குழுமிய அவையோர்முன், எரியிற்காய்ச்சிக் கொதிக்கும் நெய்யில், ஒரு இடப முத்திரையினையிட்டுத் தமது கைமுக்கியெடுப்பதாற் குற்றமுண்மையின்மைகளை யறிவிப்பதாம். இவ்வழக்கம் இவ்வாலயத்திருந்தமைக்கேற்ற அடையாளங்கள் காணப்படுகின்றன. பலகேரளப்பார்ப்பார் இக்கைமுக்குச்செயலைச் செய்து, சிலர் கைபொள்ளுதலாய்ப் புண்பட்டும், சிலர் கரம்பொள்ளாது புண்படாதிருந்தனவெனவும், தண்மையுடைய வெண்ணெயிற் கைமுக்கி இடபத்தினை யெடுத்த ஒரு ஐயுற்றோன் கை மிகக் கருமையுற்றுக் கறுத்ததெனவும் கூறப்பெற்ற குறிகள் இங்கு காணப்படுகின்றன. அன்றியும், $ சுகசந்தேசம் என்ற வடமொழிக் காவியத்தில், சுசிந்தையாலயத்துள்ளே நிகழும் இக் கை முக்குமாண்பினை விளக்கிக் கூறியிருப்பதாய், அக்காவியப்பாடலை யெடுத்துக்காட்டியுமிருந்தது. திருவிதாங்கூர் அரசரும் கொச்சிநாட்டு அரசரும் கொல்லமாண்டு 937-ல் செய்த வுறுதிப்பாட்டின் முறையாய்க் கொச்சிநாட்டரசராகிய வீரகேரளவர்மமர், பாலராமவர்மமரென்ற திருவிதாங்கூர் மன்னர்க்கும், இம்மன்னர்மரபினோர்க்கும் யாதொரு வழியினும் தீங்கியற்றேமெனச் சுசிந்தைத் தாணுநாதர் திருச்சந்நிதிமுன் உண்மை செய்தமையும் கூறப்படுகிறது.

அச்சிலாசாஸனத்தை ஈண்டு முறையே மொழிவாம்.

சுசிந்தைத் தாணுநாதராலயத்துள் முதற்பிராகாரத்தின் வடபாற் கற்சுவரின் இவ்வாறெழுதப்பட்டிருக்கிறது. கொல்லம்

---

$ சுகசந்தேசமென்ற வடமொழிக் காவியம், கொல்லமாண்டு ஆரம்பத்திற்கு 175-ஆண்டுகட்கு முன்னியற்றப்பட்டதென ஆராய்ச்சியோரால் கூறப்படுகிறது.

தோன்றி முந்நூற்றிருபதின் மீன ஞாயிறு- வேணுடு வாழ்கின்ற திருக்கோத கேரளவர்ம்மர், சுசீந்திரமுடைய மகாதேவர்க்கு திருவமுதிற்கு அரிநாழியும், திருவேங்கட நிலையாழ்வார்க்குத் திருவமுதிற்கு அரிநாழியும். * அக்கிரம் இரண்டிற்கு அரிநாழியும். ஆக அரிபனிரு நாழியும், கறிபமுது நெய்யமுது தயிரமுதுகட்கும், நித்த நிபந்தம் செய்வதாக விடப்பட்ட நிலமாவது. இத்தேவர் தேவதானங்களில், நிருபசேகரநல்லூர்ப் பட்டம் தென்வளநல்லூர் இருப்பூவாழும் நிலத்தில், இருபதுமா நிலமும், இதனோடை டைய ஒருப்பூ வாழும் நிலத்தில் பத்துமாவும், ஆக நிலம் முப்பதுமாவுக்கும், இறுர்கக்கடவதாகிய இறை தேவஸ்ரீ பண்டாரத்தில் நெல்லளந்து, நித்தநிபந்தம் சந்திராதித்தர் செல்வதாகத் திருப்படியில் நீர்வார்த்தருளிக் கல்வெட்டிக்கொள்கவென்று திருவெழுத்திட்ட திருமுகப்படி எழுத்துவெட்டினன், இவ்வூர்த் தச்சன் சோமன் செல்வனுன, மூந்நூற்றுவ ஆசாரியன் எழுத்து.

இக்கல்வெட்டு எழுதப்பெற்று இற்றைக்குச் சற்றேறக் குறைய 800 ஆண்டுகளாகின்றன. இன்னும் பல சிலாசாஸனங்கள் இவ்வாலயத்தின் முதற்பிராகாரத்துப் புறக்கற்சுவரினும், செண்பகராம மண்டபத்தினும், தென் கயிலாயத்துக் கற்பாறையினும், எழுதப்பட்டிருக்கின்றன. எழுத்துக்கள் தமிழினும் தமிழிலுள்ள பழய வட்டஎழுத்துக்களாயும் விளங்கும். இக்கல்வெட்டுகளில் அரசர்முதற் பல பெரியாரியற்றிய திருப்பணிகள் திருத்தொண்டுகள் இன்னதெனவும் இன்ன காலத்தெனவும், இங்ஙாளினும் காணலாம். இதில்சிறந்த (5) சிலாசாஸனங்களை எடுத்துக் கூறுவாம்.

### 1. சோழ பராந்தகன் இயற்றிய திருத்தோண்டு.

மதுரையும். ஈழமும்கொண்ட சோழபராந்தகற்கு யாண்டு 35-ல் கொல்லம் ஆண்டு 117-ல் இவ்வாண்டு நாஞ்சி நாட்டுத்

* அக்கிரம் என்பது—அந்தணர்க்குணவளித்தலாம்.

திருச்சுசீந்திரமுடைய மகாதேவர்க்கு சந்திராதித்தர்மலும் நிய திஉழக்கு நெய்முட்டாமல் யெரிவதாகத்திருநந்தா விளக்கிற்கு விடப்பட்ட. † சாவா மூவாப்பேராடுகள் 50. இவ்வரசனது இத்திருத்தொண்டு தென் கைலாயத்துக் கற்பாறையில் வட்ட ஏழுத்துக்களால் எழுதப்பட்டிருக்கின்றது.

## 2. இராஜ ராஜச்சோழன் இயற்றிய திருத்தொண்டு.

திருமகள் போலப் பெருநிலச்செல்வியும் தனக்கேவுரிமை பூண்டமை மனக்கொளக் காந்தளூர்ச் சாலை கலமறுத்தருளி கங்கை பாடியும் நுளம்பர் பாடியும் தடியர் பாடியும் வேங்கை நாடும் குடகுமலை நாடும் தண்டார்க் கொண்டு தன்னெழில் விளங்க எல்லையாண்டும் தொழுதக விளங்கும் யாண்டைச் செழியனைத் தேசு கொள் கோ இராஜ கேசரி வர்மரான இராஜ ராஜச் சோழன். கொல்லம் ஆண்டு 185–ல் நாஞ்சி னாட்டுத் திருச்சுசீந்திரமுடைய மகாதேவர்க்கு திருநந்தாவன மும் திருநந்தாவிளக்கும் அவ்விளக்கின் நெய்க்குமாய்விடப பெற்ற சாவா மூவாப்பேராடுகள் 50.

---

† சாவா மூவாப் பேராடுகள் என்பது கோவிலுக்கு விடப்பட்ட ஆடு மாடுகளை—மன்றுடிகள் (இடையர்) பெற்றுக்கொண்டு அதற்குரிய பொருளை நெய்யாய்க் கொடுப்பார்கள். கோவிலுக்கு விடப்படும் பசு ஆடு இவைகள் சாவா மூவாப் பசுக்கள் அல்லது ஆடுகள் என்று சொல்லப் படுகின்றன. இவ்வழக்கம் வாழையடி வாழையாய் இப்பிராணிகள் வளரு வதைக் குறிப்பதாம். கல் வெட்டுக்களிற் பெரும் பாலும் இவ்வித கொடை களேயுள்ளன எனக் கலைமகளென்ற மாதப் பத்திரிகையில் (பாண்டிய சரித்திரமும் ஆதாரங்களும்) என்ற விஷயத்துள் திரு பாலசுப்பிரமணிய அய்யர் அவர்களால் விளக்கப்பட்டிருக்கிறது. (இதற்கு) புற்றேரியூர் திரு தேசிகவிநாயகம்பிள்ளை அவர்கள் கொண்ட பொருள் அடியில் வருமாறு திருக்கோவிலுக்கு ஒருவரால் விடப்பட்ட 50 ஆடுகள் மிகப்பெருகி (500) ஆயினும் மிகக்குறைந்து 5 ஆயினும் எந்நாளும் 50 ஆடுகளிருப்பதாக இருபாலாரும் ஒப்புக்கொண்டு அதற்கு இவ்வளவு நெய் நாள் தோறும் கொடுக்க வேண்டியதென்று ஏற்பட்ட முறை பிறழாது கொடுத்துவர வேண்டும் இக்கருத்தை விளக்கவே அவ்வாடுகட்கு சாவா மூவா என்ற விசேஷம் கொடுக்கப் பட்டிருக்கிறது.

### 3. குலோத்துங்கச்சோழன் திருத்தொண்டு.

இச்சோழவரசர் கொல்லம் 245–முதல் 295–வரையும் அரசுபுரிந்தவராவர். புகழ்மாது விளங்க நிலமகள் நிலவ மலர்மகள் புணர ஜெயமாது விரும்ப வீரசிங்காதனத்தில் அவனி முழுதுடையா ரோடும் வீற்றிருந்தகோ. இராஜ கேசரிவர்மரான சக்கிரவர்த்தி, குலோத்துங்கச் சோழன் 32–ஆவது வருஷத்தில் கொல்லமாண்டு–277-ல் சுசீந்தரமுடைய மகாதேவர்க்கு * திருநந்தா விளக்கிற்கு விடப்பட்ட சாவா மூவாப் பேராடுகள் 50.

### 4. எறலிப்பாண்டியன் என்ற மாறன் சடையன்வழி வந்த வீரபாண்டியன் திருத்தொண்டு.

கொல்லம் ஆண்டு 123–ல் சோழன்றலைகொண்ட வீர பாண்டியர்க்கு யாண்டுபதினைந்தாவதின் எதிரே நாலாவது. இவ்வாண்டு நாஞ்சினாட்டுத் திருச்சுசீந்திரமுடைய மகாதே வர்க்கு ஈழக்காசு 30. திரிக்குக்காசு 1 விளக்குநிறை துலாம். நெய் உரியும் விளக்கின் நெய்க்குச் சாவாமூவாப்பேராடுகள் 50. இப்பாண்டியன் பெயர்கொண்ட மண்டபம் ஒன்று சுசிந்தை யாலயத்திலிருக்கிறது. அது வீரபாண்டியன் மணிமண்டபம் என வழங்கிவருவதாம்.

5. விஜயநகரத்து மன்னர் பிரதிநிதியாகிய, இராமராய விட்டலமாராயனால் கொல்லம் ஆண்டு 721-ல் சுசிந்தை ஆலயத்தி லுள்ள பழய திருக்கோபுரப்பணி இயற்றப்பட்டது.

சுசிந்தையாலயத்தின் அரும்பெருமாண்புகளும், சிலா சாஸனங்களும் எனக்கு நன்கறிவித்த பெருந்தகையாளர் களாகிய, சுசீந்திரம் வட்டப்பள்ளி மடத்தில் பிரம்ம ஸ்ரீ வாசுதேவசர்மா அவர்கட்கும், புற்றேரியூர் திருவாளர் தேசிகவிநாயகம் பிள்ளையவர்கட்கும், கன்னிமாகுமரியில் வதிந்து சிலகாலத்திற்கு முன் காலஞ்சென்ற சிதம்பரகிருஷ்ண அய்யர் அவர்கட்கும் எனது என்றும் மறவா நன்றியுரித்தாகுக.

---

* திருநந்தா விளக்கு–என்றும் அழியாத் தீபம்.

இந்நூலைப் பரிசோதித்து, இதற்குச் சிறப்புப்பாயிரமியற்றி யெனக்கூக்கமளித்து, இதை அச்சியற்றுவதிற் பிழைத் திருத்தம் பார்த்துத் தமது சிரமத்தையும் கருதாது உதவி செய்த எனது அன்பார்ந்த நண்பரும், மதுரைத்தமிழ்ப்பண்டிதரும் வித்வானுமாகிய தெங்கமபுதூர். தா. சாஸ்தாங்குட்டிப் பிள்ளை யவர்களது உழுவலன்பை, யான் ஒருபொழுதும் மறக்கற்பாலதன்று.

---

# சுசிந்தை மான்மியச் சுருக்கம்.



நான்முகன் புதல்வராய், வேதாகமாதி பன்னூற்களை நன்கறிந்து, வேள்வியாதி நற்கிரியைகளியற்றி, அறுபகை வென்று, ஐம்புலனடக்கி, நாற்கரணமொடுக்கி, முப்பொருள் தேர்ந்து, இருவினையொழித்து, ஏகபரம்பொருளையுணர்ந்து, தானதுவாய், அதுவே தானாய், விளங்கிய அத்திரிமுனிவர் அருந்தவம் புரிந்து வந்தார். இம்முனிவர் கற்பிற்சிறந்த அனசூயை யென்னும் மனைவியுடன் இமயமலைச்சாரலில் திருமாலை நோக்கிப் பெருந்தவமியற்ற, அத்தவமகிமையால், திருமால் எழுந்தருளினர். முனிவர் அப்பெருமான் திருவடிகளிற் பணிந்து, "பாலாழிப் பாம்பணையிற் பள்ளியுறும் பரந்தாமா"! எமக்கு நற்புத்திரப்பேறருள்வது, தேவரீர் திருவருளையன்றி யுளதோ வென வேண்டிநின்றார். அப்பரந்தாமன் முனிவரை நோக்கி முனிபுங்கவா! பொதியமலையின் தென்பால் விளங்கும் கடலுக்கு வடபாலிருப்பதாகிய ஞானகானத்திற் சென்று தவமியற்றுவீராக. யாம் அயனரனுடன் அங்கு நும் புதல்வர்களாய் வருவேமென்றருளினர். அத் திருமொழிகேட்டு மகிழ்வுற்ற அத்திரி முனிவர் மனைவியுடன் ஞானகான வனமெய்தி அவ்வனத்தின் மகிமைகளைக் கண்டுவந்து, அங்கோர் * ஆச்சிரமமியற்றித் தவம்புரிந்தார். அக்காலத்தில், சதுர்முகப் பிரமன் ஒருவேள்வியின் பொருட்டு அழைப்ப அத்திரி முனிவர் பிரமனுலகிற்கெழுந்தருளினர்.

அந்நாள் அம்முனிவர் மனைவியின் கற்பின் மகிமையை விளக்கத் திருவுளங்கொண்டு, அயனரியரனாகிய மும்மூர்த்திகள் மிகமுதிர்ந்த கிழத்தன்மையராய், தவவடிவம் தாங்கி அங்கெழுந்தருளினர். அம்முதிர்ந்த முத்தபோதனர்களை

* அத்திரி முனிவர் ஆசிரமம் இபற்றிய தலம் ஆச்சிராமம் என வழங்கப் பட்டுவருகிறது.

அனசூயை கண்டு வணங்கியுபசரித்து "தேவரும் புகழும் அருந்தவப்பெரியீர்! திருவமுது செய்தற்கெழுந்தருள்வீர் என்று வேண்டினள். அம்மூவரும் அனசூயையினை நோக்கி, "நீ நிருவாணியாய் நின்றமுதுபடைத்தாலுண்போம்; அன்றியுணவு கொள்ளோம்" எனக் கூறினர். அம்மொழிகேட்ட அனசூயை அரஅர வென்றிருசெவிபொத்தி, இதுகேட்க விதியோவென மனம் வருந்தி, அக்கபடத் தபோதனர்களைக் குழவிகளாக்கக் கருதினள். அருந்ததி புகழும் கற்பிற் சிறந்த அனசூயை தன் கணவன் திருவடித் தீர்த்தத்தைக் கையிலெடுத்து இம்மூவரும் குழந்தைகளாகக் கடவர் எனக்கூறி அவர் முன் வீசினள். அவ்வுத்தமக் கற்பரசியின் கற்பின் மகிமையால் மும்மூர்த்திகளாகிய அம்மூவரும் மூன்று குழந்தைகளாய்க் கிடந்தனர். அது கண்டு அனசூயை அகமகிழ்ந்து, அம்மூன்று குழந்தைகளையெடுத்து நீராட்டிப் பாலூட்டிப் போற்றிவந்தாள்.

மும் மூர்த்திகளின் தேவிமாராகிய மலைமகள், மலர்மகள், கலைமகள் என்பவர் தங்கள் நாதரைத்தேடித் தேவருலகிற் சென்றார். அங்கு நாரதர் சந்தித்து "அன்னையரே! பூவுலகத்தில் நாவலம் தீவில் அத்திரிமுனிவன் பத்தினி கற்பைச் சோதிக்க முத்தொழில் புரியும் மூவரும் கிழவுருவாய்ச் சென்றனர். அங்கு போய்க் காண்பீர்" எனவுரைப்ப முத்தேவியரும் * ஞானகானவனமடைந்து தங்கள் ஜோதி வடிவை மாற்றி மூன்று கன்னியர்களாய் அனசூயை யுறைவிட மணுகினர் அங்கு மூவுலகும் படைத்துக் காத்தழிக்கும் மூவரும் மூன்று குழந்தைகளாய் வாய்விட்டழுதுகிடக்கும் திருவிளையாடலைக்கண்டு அதிசயித்து அனசூயையினைப் பார்த்து "எம்முயிர்க் கணவரை வளர்க்கப் பெற்ற தாயாகிய உனக்கு நிகர்யாருளர்; நின்பெருந்தவமே தவம்" என்றுரைப்ப, அனசூயை இக்கன்னியர் மூவரும் அம்மூவர் மனைவியரென்றுணர்ந்து அடிபணிந்து "எம் முனிவர் வருமளவும் இங்கிருக்கும் ஞானவாவிக்கரையில் தவமியற்றுவீராயின் உங்கள் தலைவர்களையடைதல் திண்ண" மென்று கூற கன்னியர் மூவரும் ஞானவாவிக்கரையில் தவமியற்றியிருந்தனர். அவர்முன் நாரதர்

* ஞானகானவனம்—ஞானத்தினைப் பயிலுங்காடு.

எழுந்தருளி அன்னோர் நிலையினையுணர்ந்து அவர் திருவடிகளிற் பணிந்து "அன்னைமீர்! நீவிர் இங்கருந்தவம் புரியக் காரணம் யா"தென, அக்கன்னியர் தங்கள் தலைவரை யடைதற் பொருட் டென்றார். அம் மொழி கேட்டு நாரத முனிவர் "உங்கள் தலைவர்களைச் சேர்ந்தின்புறுதற் கேற்ற நோன்பு ஒன்றுளது, அது மார்கழித் திருவாதிரை நோன்பாம்; 12 மாதங்களில் மார்கழிமிகச் சிறந்தது; அதன் வரலாறு சொல்லக்கேண்மின். ஆதியில் அகண்ட பரிபூரணமான பிரமத்திலிருந்து மாயை தோன்றி, அதினின்று பஞ்சபூதங்களும் பௌதிகங்களான உயிர் உலகங்களும் தோன்றி யொடுங்கும், பின்னர் அந்த மாயையிற் குற்றமற்ற அமிர்தரூபியராய் அதனுளக்காலத்திருந் திர். முக்குணங்கள் நீங்கிய நின்மலன் ஞான சக்தியைக் கூடும் போது, முக்குணங்களோடு பொருந்திய வடிவமாய்ப் புவனங் களனைத்தையும் படைத்து, அவை யியங்குதற்குத் தான் நடித்தலே மார்கழித் திங்களாம். தன்னருளுதவு கின்றது ஞான சக்தியாதலால், அவளருளைப் பொருந்து நாள் திருவா திரை நாளாம். முக்குண சகிதர்களாகிய மும் மூர்த்திகள் முத் தொழில்களையும் முச் சத்தியாதிகளையும் அப்பெரிய ஞானமா சத்தியருளைப் பெறுவர். 27—நாட்களிற் சிறந்த இவ்வாதிரை நாளை ஈசனுளெனக் கூறுவர். இச்சிறந்த மாண் புடைய திருவாதிரை நாளில் சத்திசக்கரமமைத்து ஞான பராசத்தியையதிற்ருபித்து சிறுசண்பகம், தாமரை, புன்னை, தாழை, மல்லிகை, அரிசாதி யென்னுமேழ்மலர்களால் ஏழு நாளளவும் பூஜித்து எழுவகையமுதுகள் நிவேதித்து ஞான சத்திமனுவை விதிமுறையோத வேண்டும். இம்முறையாயிந் நோன் பியற்றினோர் எண்ணியயாவும் இனிது வந்தெய்தப் பெறுவர்" எனக் கூறி நாரதமுனிவர் விடைபெற்றுச்சென்றார். இம் முனிவர் மொழிந்த வாறு முத்தேவியர்களும் ஆதிரை நோன்பியற்றியிருந்தனர்.

அத்திரி முனிவர் பிரமனுலகிற் சென்று அங்கியயற்றும் வேள்வி முடித்து இந்திரன் ஒரு வேள்வியின் பொருட்டு

அழைப்ப அங்கெய்தி யிருந்தார். அம்முனிவரிடம் நாரதமுனி யடைந்து ஞான கானவனத்தில் மும்மூர்த்திகள் வந்து மூன்று குழந்தைகளாய் விளங்கும் செயலைக்கூறக் கேட்டதிசயித்த அத்திரி அங்கியற்றும் வேள்வியைவிரைவின் முடித்து யோக முயற்சியால் வான்வழிக்கொண்டு ஞான வனத்துள் தமது சாலையிடத்துற்றார். அங்கு அழகாய் விளங்கும் முச்சிறார்களைக் கண்டு தன் நாயகியிடம் இச்சிறுவர்கள் யாவரெனக் கேட்டருளினர். நாயகி தன் கணவனைத்தொழுது "தேவரீர் சென்றிருந்தபோது, ஒருநாள்மிகமுதிர்ந்த கிழத்தன்மையர்களாய்ப் பசிமிகுந்த மூன்று தபோதனர்களிங்கெய்தினர். அடியாள் அன்னோர்களைப் பணிந்துபசரித்துத் திருவமுது செய்தற்கெழுந்தருள்வீரென விரும்பினேன். அன்னோர் கூறத்தகா மொழி கூறக்கேட்டு வருந்தியயான் அவர்களைச் சிறாராக்கக் கருதித் தங்கள் பாதநீரை அவர்முன் தூவினேன். அத்தீர்த்த மகிமையால் அம்மூவரும் மூன்று குழந்தைகளாய் விளங்க இச்சிறுவர்களை யன்பாயெடுத்துப் போற்றிவந்தேன்" என, முன்னிகழ்ந்த வுண்மையினை வுரைத்து நின்றாள். தன்காதலியின் கற்பின் மாண்பினைக்கேட்டு மகிழ்ந்த அத்திரிமுனிவர் நாயகியைநோக்கி, "இன்னோர் தமது பழயவுருவம்பொருந்துமாறு செய்யக்கடவாய்" என்றருள, அனசூயை மீண்டும் கணவனைத் தொழுது, "யானுத்தமக் கற்பினளாயின் இம்முச்சிறுவர்களும் பழய தம்முருவம் பொருந்துக"வெனக்கூறினள். அப்பொழுது அம்முச்சிறுவரும் அரனரிஅயன்என மும்மூர்த்திகளாய் முன்னின்றார்கள். அதுகண்டு அளவிலாப்பெருமகிழ்வோடும் அத்திரி தன் மனைவியுடன் அன்னோர் திருவடிகளிற் பணிந்து நின்றார். அம்மூவரில் தாமரைக்கண்ணன் முனிவரைநோக்கி, நம்மன்பு எம்பால் நிலைபெறுக வென்றருளினர். அச்சமயம் அனசூயை வணங்கிச் சில வரங்களை விரும்பினள். 1. தன் நாயகனிடம் தனக்குப் பேரன்புபெருகவும். 2. தேவரீர் மூவரும் இன்னும் எங்கள் புதல்வராய்வரவும். 3. இங்கு தவம்புரியும் முப்பெருந்தேவியருடன் எழுந்தருளி நற்றிருக்காட்சிதரவும் ஆகிய மூன்று வரங்களை யருளீரென்று வேண்டி நின்றாள். செந்திருமால்

அக்கற்பரசியை நோக்கி நும்பதியன்பு மென்மேலோங்குக, யாமூவரும் சந்திரன் தத்தாத்திரையன், துர்வாசன் என மூன்று புதல்வராய் இன்னும் வருவோம், இவ்வனத்தில் தவம்புரியும் முப்பெருந்தேவியருடன் நுமக்குத் திருக்காட்சி தருவோ மென்றருளிச்செய்து மறைந்தருளினர்.

அத்திரி மனைவியுடன் தேவர் முனிவர் புகழப் பெரு மகிழ்ச்சியுற்றிருந்தார். அக்காலத்தில் அங்கு நாரதர் எழுந்த ருளி, திருவாதிரைநாளில் மும்மூர்த்திகள் முத்தேவியரைத் திருமணம் புரிய எழுந்தருளும் திருக்காட்சிகாணச் செல்வோ மெனக்கூற, பற்பல முனிவரோடும் மனைவியோடும் அத்திரி முனிவர் ஞானவாவிக்கரையிற் சென்றார். அங்கு முப்பெருங் கன்னியர் தாங்களியற்றிய திருவாதிரை நோன்பின் முடிவில் மும்மூர்த்திகளும் தம் தம் ஊர்திகளில் எழுந்தருளி வரக்கண்டு வணங்கினராய்த் தத்தம் தலைவர்களிடம் மலைமகள், மலர்மகள், கலைமகள் எனும் முப்பெருந்தேவியரும் சேர்ந்தின்புற்றார்கள்.

காண்டற்கரிய இப்பெருங்காட்சியைக்கண்டு தேவர் முனிவர்களெல்லாம் பெருமகிழ்வுற்றுநிற்க, வானிற் சக்திக ளோடெழுந்தருளிக் காட்சிதந்த அம்மூவர் திருமுன் அத்திரி முனிவர் மனைவியுடன் பன்முறை பணிந்துநின்றார். மென்மே லும் பெருகிவளரும் பேரன்புடைய இம்முனிவர், அத்தேவாதி தேவர்களிடம் எம்பெருமிறைவர்களே! அடியேங்களியற்றும் பூஜையை யேற்றருள் புரியவேண்டுமென்று வேண்டிநிற்க முளரியங்கண்ணன் முனிவரை நோக்கி, இத்தலத்தில் இந்நாள் அமுதஞானமயமாய் ஒரு சிவலிங்கமும், ஒரு அரசும் தோன் றும்; அச்சிவலிங்கத்தினும், அத்தருவினும் யாம் மூவரும் அடி நடுமுடிகளினுமாய் விளங்குவோம்; அவற்றின் மகிமை யாவும் புகல்வதரிது. அவ்வருண்மூர்த்தச் சிவலிங்கத்தினும் அவ்வரசி னும் யாமேயெம்மைப் பூஜித்து உலகத்தை மகிழ்விப்போம்; இச்செயலைக்காண ஏழு முனிவர்கள் இற்றை நாளளவும் இங்கு மாதவம் புரிகின்றனர்; அம்முனிவர்களுடன் நுமக்கும் பேரா

னந்தம் பெருகப் பெருங்காட்சியளிப்போமென்றருளிச்செய் தார். அத்தேவ தேவனருண்மொழிகேட்டு அத்திரியும் அன ருசூயையும் மற்றை முனிவர்களும் அளவிலாப் பெருமகிழ்வுற்றி ருந்தனர். அப்பால் அத்திரி முனிவரின் விழி, உள்ளம், கரம் இவற்றினின்று சந்திரன், தத்தாத்திரையன், துர்வாசன் என் னும் நாமத்துடன் மும்மூர்த்திகளும் மூன்று பாலர்களா யுதித்துவந்து அத்திரியையும் அனசூயையும் தழுவி நின்றனர். அப்பொழுது ஒரு பேரொலியுண்டாக இவ்வொலி யாதென்று அத்திரியாதி முனிவர் நோக்கும்போது, பாதலத்தினின்று ஒரு அரசு எழுந்து உலகத்தோர் கண்ணுளைப்பரிதாகி நின்றது. அதற்கு மேல்புறம் மும்மூர்த்தியுருவாய் நிலைபெற்ற ஜோதி யாய் அமிர்தஞானமயமாய், அருள்வடிவாய்ச் சிற்பரஞானச் சிவலிங்கம் தோன்றி விளங்கக்கண்டு தேவர் முனிவர் இசை பாடித் துதித்தனர். அப்பெருங்காட்சியைக் கண்டு பேரா னந்தமுற்று நின்ற அத்திரிமுனிவரின் முன்னர் அவர்புதல் வராய் வந்த சந்திரன், தத்தாத்திரையன், துர்வாசன் எனு மூவரும் தாமாகிய சிவலிங்கத்தினும் அரசினும் அர்ச்சித்து பூஜிப்போன் பூஜையாதியாவும் தாமாம்நிலையினை சத்தமுனிவர் கண்டு பேரானந்த முறும்படி செய்து தந்தையாகிய அத்திரியை நோக்கி நீர்பூஜிப்பீர் என்றருளிச் செய்து அச் சிவலிங்கத்துண் மறைந்தருளினர். பின்னர் அத்திரி முனிவர் அவ்வமுதஞானச் சிவலிங்கத்தினும் அவ்வரசினும் அர்ச்சித்துப் பூஜை புரிய மும் மூர்த்திகளும் வெளிவந்து திருக்காட்சி கொடுத்து இகத்திற் பரமுத்தியளித் தருளினர். முதல் யுகத்தில் அத்திரியாதி முனிவர்களும் மற்றை யுகங்களில் சத்த முனிவர்களும் வசிட்டாதியோரும் சனகாதியோரும் பூஜித்துப் பேறு பெற்றனர். முதல்யுகத்தில் அரசானவத் தருவானது 2–ல் துளவாயும், 3–ல் வில்வமாயும், 4–ல் (கலி யுகத்தில்) கொன்றையாகவும் விளங்கும் மாண்புடையதாம் பொற்கொன்றையாய்ப் பொலியும் இக்கலியுகத்தில் ஆதி சங்க ராசாரியர் பூஜித்துச் சின்மயானந்தரூபமாய் விளங்கினர்.

இந்திரன் கௌதமமுனிவர் மனைவியாகிய அகலிகைபாற் காமுகனாய்ச்சென்று அதனாலடைந்த பழியால் நாணுற்றுமிக மனமழிந்திருந்தான். தேவர் குருவாகிய வியாழன் இந்திரனை நோக்கி மேகவாகனா! நீயடைந்த பழியாலுன் னுடம்பினுற்ற அசுசியானது திருமூர்த்திகள் திருவருளாலன்றித் தீர்வரிது; ஆதலின் அதற்கோர் வழி கூறுவேன் என்றருளினர். அம்மொழி கேட்டு இந்திரன் குலகுருவைப்பணிய அமரர்குரவன் அமராதிபனை நோக்கி பூவுலகில் தென் பாற்றிசையில் வனங்களிற்சிறந்த ஞானகான வனத்துள் எழுந்தருளி விளங்கும் மும்மூர்த்தி யுருவாகிய தாணுமாலயமூர்த்தி திருமுன் சென்று பணிந்து பூஜிப்பா யாயின் அப் பெருமான் திரு வருளாற் சுசியடைந்துய்வா யென்றருளிச் செய்தார். வாசவன் தன் ஆசிரியர் கூறிய மொழி கேட்டு மகிழ்ந்து அப்பொழுதே தேரேறி தேவர்கள் சூழப்பூவுலகில் தென்பாற்றிசை நோக்கி வருவதாயினன். அன்னவன் வரும் நிலை கண்டு திருநந்திதேவர் முன்னுற்றுத் தடுப்பத் தேவர் கோன் தான் இறைவரைப் பூஜித்தற்குத் தேர் முதலிய ஆடம்பரத்தோடு வந்தமையே தடையுற்ற காரணமென்றுணர்ந்து * தன்றேரினை அவனியில் நிற்கச்செய்தனன். பின் இந்திரன் அந்நந்திதேவரை வணங்க நந்திதேவரருளிய முறையாய் சித்தர் கிரியென்னும் மருத்து மலையிற் சென்றான். அங்கு தன்னைத் தேடி வந்த ஐராவத மென்னும் வெள்ளை யானையால் அம்மலையிலொரு தீர்த்தமுண்டாக்கி அதற்கு ஔஷததீர்த்தமென்று பெயர்வைத்தான். இதுவன்றி அந்த யானையை நோக்கி பொதியமலையினின்றோர் நதிவரச்செய்து அந்நதியானது ஞானகானவனத்தின் வடபாலாய்ச்சென்று தென்கடலில் சேருமாறு செய்வாய் என்று கட்டளையிட்டனன். வெள்ளையானை அவ்வாறே ஒரு நதியினைத் தனது நாற்பெருங் கோட்டாற் கீறிவந்தது, அது கண்டு இந்திரன் அவ்வாற்றிற்கு திருக்கோட்டாறு எனும் பெயர் வழங்கி அம் மருத்துமலையிற் சிலகாலம் தவமியற்றியிருந்தனன். அதன்மேல் உத்தராயனப் புண்ணியகாலமென்றுரைக்கும் தைமதியில்

---

* இந்திரன் தேர் நின்ற இடம் - தேரூரென்று பெயர் வழங்கிவருகிறது.

எவ்வெவர் பாவங்களையும் போக்கித் தூய்மை தரும் புண்ணியத்தலமாகிய ஞானகான வனமடைந்து அங்குறையும் இறைவனை அனந்தநாட்களாய்ப் பூஜித்துவந்தான்.

இவ்வாறு இந்திரன்தன்னுள்ளே பெருகிவளர்ந்த பேரன்பாய்ப் பூஜித்துப் பணிந்து போற்றிவரவே கருணைக் கடலாய் விளங்கும் தாணுமாலயமூர்த்தி திருக்கருணை கூர்ந்து அவ்விந்திரற்குத் திடசை செய்வித்து அதனுலவன் காயச்சுசியடையுமாறு திருவுளங்கொண்டு, கைலையிற் சென்று தமது நந்தியையழைத்து வாவென்றருள, இந்திரன் கைலைக்கேகி நந்திதேவரையழைத்துவர அந்நந்திதேவருடன் வந்த தேவர், முனிவர், திசைகாப்போர் ஆதியாவரும் சிவகணங்களாகிய முந்நூற்றந்தணர்களும் வந்து தமது திருமுன் சூழ்ந்திருப்ப, கொன்றையடிமுன் ஒரு சபையமைத்து, தமக்குத் தென்பால் மாயற்கும் வடபால் அயனுக்கும் இருப்பிடம்நல்கி அச்சபைமுன் எரியினிற்காய்ச்சிக் கொதிக்கும் நெய்க்கொப்பரையில் தமது இடபமுத்திரையினை இட்டு இந்திரனை யதின் மூழ்கி எடுக்குமாறு அருளிச்செய்தனர். ஈசனருளியபடியே வாசவன் அவ்வெரிநெய்யின் மூழ்கி முத்திரையினையெடுத்து மேலெழுந்து பொன்போல் விளங்கு மேனியனுய்ப் பேரானந்தமுற்றுநின்றுன். எப்பதியினும் தீராத தனது காயத்திலுற்ற அசுசியானது இப்பதியினீங்கிச் சுசிதந்ததால் இஞ்ஞானகான வனமாகிய இத்தலம் இந்நாள் முதல் சுசீந்திரமென்று பெயருறக்கடவது என்றுரைத்து மகிழ்வுற்றுன். இந்திரன் சுசீந்திரத்தமர்ந்த இறைவர்பால் மேன்மேற் பெருகி வளர்ந்த பேரன்பாற் பணிந்து, தேவாதிதேவராமிறைவர்க்குத் திருக்கோயிலமைத்துத் திருவிழா நடத்தித் திருவாதிரை நோன்புற்றுப் பெறற்கரும்பேறெலாம் பெற்று அப்பதியை விட்டகலாதிருந்தனன்.

அரும் பெரும் பேறெலாம் பெற்று இப்பதியினை விட்டு நீங்காதிருந்த இந்திரன் பேரன்பிற்குத் திருவுளம் மகிழ்ந்தருளிய மூவர்கோனுன முக்கண்ணன், ஆயிரக்கண்ணனை நோக்கி, தேவர் கோனே! நீவுனது தேவுலகாண்டு நாள் தோறும் அர்த்தயாமத்தில் இங்கடைந்து எம்மைப் பூஜிக்கக் கடவாயென்ற

ருளிச்செய்ய, அவ்விறைவன் திருவருண் மொழிகளை மறுக்க முடியாத அமரர்கோன் தன் பதியடைந்து, அன்று முதல்த் தினமும் பாதியாமத்தில் திருச்சுசிந்தையில் வந்து, * பூஜித்து வருவதாயினன். வடகைலாயம்போற்சிறந்த மாண்புற்றுத் தென்பால் விளங்கு வதால் இவ்வாலயம் தென் கைலாயமென் றழைக்கப்படுகிறது.

இச்சுசிந்தையம்பதியில் பண்டைத்தமிழ் வேந்தர்களாகிய சேர சோழ பாண்டியர்கள் வந்து, இறைவனைப் பணிந்து பல திருப்பணிகளியற்றிப் பெரும் பேறு பெற்றுய்ந்தார்கள்.

அத்தமிழ் வேந்தர்களின் பின், இம் மலை நாட்டுத் திருப்பாப்பூர் மூத்த திருவடிகளும், வேணாட்டடிகளும்' விஜயநகரத்து மன்னனும், திருமலைநாய்க்கனும், இப்பெரும் பதியில் வந்து பல திருப்பணிகள் இயற்றியுள்ளாரென இச்சுசிந்தை ஆலயத்திலுள்ள சிலாசாஸனங் களாலறியலாம். இச்சிலா சாஸன விஷயங்கள் இந்நூலில் 7-வது மகிமையில் விளங்கக்கூறப்படுகின்றன.

மலைநாட்டு மன்னர்கள் சுசிந்தையாலயத்தில் இயற்றிய திருத்தொண்டுகளாவன:—

1. மேன்மை தங்கிய விசாகம் திருநாள் இராமவர்ம மன்னர் திருக்கோபுரப்பணி ஆரம்பித்தனர்.

2. மூதறத்தின் முழுவடிவாய்த்தோன்றிய, மூலம்திருநாள் இராமவர்ம மன்னர் அத்திருக் கோபுரப்பணியைப் பூர்த்தி செய்தனர்.

3. ஜீவகாருண்ணியம் நிறைந்த திருவுளத்தால் தமது நாட்டில் ஆடு முதலான உயிர்ப்பலிகொடுக்கும் வழக்கத்தினை அறவேயொழித்து, அரும் புகழுடைந்த (றீஜென்று) திருஸேது இலட்சுமிபாய் அரசியார் சுசிந்தை யாலயத்து இறைவர்க்கு திருப்பொன்னங்கியியற்றினர்.

---

* இக்காரணத்தால் சுசிந்தையாலயத்தில் அர்த்தயாமப்பூஜை இந்திரனுக் கென்றே விடப்பட்டிருக்கிறது.

4. இந்நாட்டில் தமது ஆட்சி முறையில் இந்துமத முடையோர் யார்க்கும் ஆலயப்பிரவேசவுரிமை கொடுத்தருளி, அதனால் இந்து மதத்திற்கே புதிய சீர்திருத்தம் செய்தவராய் ஒப்பற்ற அழியாப் பெரும் புகழுற்ற ஸ்ரீ சித்திரைத்திருநாள் பாலராமவர்ம்மமன்னர் சுசிந்தையாலயத்து இறைவர்க்கு அஷ்ட பந்தனத்திருத் தொண்டு அழகாய்ச் செய்தனர்; இதுவன்றி தெற்கிடத்துப் பெருமாள் எழுந்தருளும் கருட வாகனமும், அறம் வளர்த்த அன்னை யெழுந்தருளும் கமலவாகனமும், வெண் பொன்னில் வியப்புற இயற்றியுள்ளார். இத்திருத்தொண்டின் சிறப்பும் காலமாதிகளும் இந்நூலில் 8-வது மகிமையில் கூறியிருப்பன காண்க.

---

# சுசிந்தை ஆலயம் அமைந்த மாண்பு.

திருச்சுசிந்தையாலயம் அமைந்திருக்கின்ற மகிமையைப் பொதுவாய்ப்பலரும் அறிந்திருப்பர் எனினும், வரன்முறையாகச்சிறப்பர் யெவரும் நன்கறியுமாறு விளக்கிக்கூற வேண்டுமென்ச்சில அன்பர்கள் விரும்பினமையால்; அம் மாண்பினை இங்கு இனிது விளங்கவுரைப்பாம்.

மாபெரும் புண்ணியத்தலமாகிய சுசிந்தையாலயத்துக்கீழ் பால் வாயிலின் வானளாவியதும், ஏழுநிலைகளையுடையதுமாகிய திருக்கோபுரம் ஒன்றுளது. இக்கோபுரப்பணி, கொல்லம் ஆண்டு 1056-ல் விசாகம்திருநாள் மன்னர் காலத்தில் துவக்கப்பெற்று 1063-ல் மூலம்திருநாள் மன்னர் காலத்தின் முற்று பெறப் பெற்றது. கோபுரவாயிலினுள்ளே வடபால் நோக்கித் திரு நந்திதேவரும், தென் பால் நோக்கிச் சிதம்பரேசுவர மூர்த்தியும், நந்த்தேவரை யடுத்த மேல் பால் சுரதேவ மூர்த்தியும் விளங்குகின்றனர். இக்கோபுர வாயில் வழியாய் ஆலயத்துட் புகின் நேரே எதிரிற்காணப்படுவது ஊஞ்சல் மண்டபம். இதில் சிற்பத்தொழிலின் நுட்பமாகிய பணிகளைக் காணலாம். இப்மண்டபத்தின் வடபால் ஈசான திசையில் விநாயகர் ஆலயம் இருக்கிறது. இவ்விநாயகர், இந்திரன் பூஜித்த காரணத்தால் இந்திர விநாயகர் எனத் திரு நாமமுற்று விளங்குவர். ஊஞ்சல் மண்டபத்தின் மேல்பால் மேற்றிசை நோக்கிஇருப்பது திருக்கொன்றையடியாலயம். இவ்வாலயத்துள் நிற்கும் கொன்றைத்தருவிற்கு நாள் தோறும் பதினொருமுறை உருத்திர மந்திரம் ஓதப்பெற்ற கும்பநீர் வார்த்து வருகின்ற வழக்கம் புராதன காலம்முதல் முறைபிறழாது இன்றும் நடைபெற்று வருகிறது. இக்கொன்றைமரம் முதல் யுகத்தில் அரசமரமாய்த் தோன்றி 2-ல் துளவாகவும் 3-ல் வில்வமாகவும் 4-ல் கலியுகத்தில் கொன்றையாகவும் விளங்கித் தோன்றும்

மாண்புடையதெனத் தலபுராணம் கூறுகிறது. * இத்தரு வினடியில் கொன்றையடிநாதர் எனுந் திருநாமத்துடன் இறைவர் எழுந்தருளியிருப்பர். இவ்வாலயத்தின் தென் பால் தெற்கு முகமாய் தெட்சணாமூர்த்தி விளங்குவர். இக்கொன்றையடி ஆலயத்தின் வடபால் † மாக்காளை நிலையுறும். தென்பால் $ கருடாழ்வார்நிலையுறுவர். மாக்காளையின் நேரே மூலஆலயமாகிய வடக்கிடத்தாலயத்தின் திருக்கொடிமரமும், கருடாழ்வார்க்கு நேரே தெற்கிடத்து ஆலயத்தின் திருக்கொடி மரமும் நிற்பனவாம்: வடபாற் கொடி மரத்தின் கன்னித் திசையில் ¶ கைமுக்குச் செயலின் சாட்சிக்கணபதியும்;அக்கொடிமரத்தின் முன் இருபக்கங்களில் திருவாயில் காப்போராகிய துவாரபாலர்களும் விளங்குவர். இக்கொடிமரத்தை யடுத்த மேல் பாலாய், மண்டபத்தின் மீதே ஒரு சதுரமாகியசிறு § வெளியமைந்திருக்கிறது. இவ்விருகொடிமரங்கள் நிற்கும் மண்டபம் சேரமன்னர் வழிவந்த செண்பகராம மன்னன் இயற்றிய காரணத்தால் செண்பகராம மண்டபமென்று சொல்லப் படுகிறது. இதனோடு சேர்ந்து இதன் மேல் பால் இருக்கும்

---

* திருவிதாங்கூர்ச் சிலாசாஸன ஆராய்ச்சித்துறையில் தலைமையுற்றிருந்த டி. ஏ. கோபிநாதருவ் எம். ஏ. அவர்கள் இக்கொன்றை மரத்தினை நோக்கி வியந்து இதன் கிளைகளில் ஒரு சிறு துண்டினையெடுத்து கல்கத்தா லண்டன் முதலிய நகரங்களிற் சிறந்த இரஸாயனப் பண்டிதர்கட்கனுப்பிப் பரிசோதித்து 2000 ஆண்டுகட்கு முற்பட்ட காலத்தது இதுஎன அவ்விஞ் ஞான ஆராய்ச்சியோரால் ஆங்கிலமாதப்பத்திரிகையிற் புகழ்ந்து கூறப்பெற்ற மாண்புடையதருவாம்.

† இந்த மாக்காளையைப் புறமதவரசன் பரிசோதித்துப் புகழ்ந் திருக்கிறான்.

$ இக்கருடாழ்வார்க்கு நாற்புறமும் விளங்கும் கற்சிலையுருவங்கள் திருமலைநாய்க்கனும் அவன் மனைவி முதலானவர்களுமாவர் எனக் கூறப் படுகிறது.

¶ கைமுக்குச் செயல் இன்னதென்று முகவுரையிற் கூறியிருக்கிறது.

§ இவ்வெளியின் வழியாய் வெய்யோன் ஒளியுறும் போழ்து, அதாவது நடுவுச்சிப் பகலில், கைமுக்குச் செயல் நடைபெறுவதாய், அதன் பொருட்டு இவ்வெளியமைக்கப் பட்டிருக்கிறது.

மண்டபம் பாண்டிய அரசர் வழிவந்த வீரபாண்டியன் இயற்றிய காரணத்தால் வீரபாண்டியன் மணிமண்டபமென்று பெயர் வழங்கிவருகிறது. இவ்வாலயத்திலுள்ள மண்டபங்களிலெல்லாம் மிகப் பெரிதும் மிக்க மாண்புடையதும் செண்பகராம மண்டபமே.

இச்செண்பகராம மண்டபத்தினை திருப்பாப்பூர் மூத்த திருவடிகளாகிய வீரராமவர்ம மன்னரால் கொல்லம் 654-ல் பேரழகுறப் பெரும்பணியாயியற்றப்பட்டது. வீரபாண்டியன் மணிமண்டபத்தின் வடபாலிருப்பது அலங்காரமண்டபமாம். இம்மண்டபத்தில் நான்கு பெரிய அழகிய தூண்கள் நிற்கின்றன. முழுக்கற்சிலையிற் பணியியற்றப் பெற்ற ஒவ்வோர் தூணும் தன்னுள் 32 சிறுதூண்களை அடக்கிக் கொண்டு விளங்கும். இவ்வலங்கார மண்டபம் கொல்லம் 585-ல் வேணாட்டில் வாழ்ந்த மார்த்தாண்ட மன்னரால் இயற்றப்பட்டது. இவ்விரு மண்டபங்களியற்றிய மாமனும் மருமகனுமாமென்றுரைக்கும் அவ்வரசர் இருவர்களின் உருவச்சிலைகள் ஒன்றையொன்றெதிர் நோக்கு முகத்தனவாய் அலங்கார மண்டபத்தின் முன் அழகாயமைந் திருக்கின்றன. வீரபாண்டியன் மணிமண்டபத்தின் மேல்பால் இருக்கும் மண்டபம் உதயமார்த்தாண்ட மன்னன் இயற்றிய காரணத்தால் இவ்வரசன் பெயரோடு உதயமார்த்தாண்டமண்டபமென்று வழங்குவதாம். இம்மண்டபத்தினையடுத்து இதன்மேல்பாலிருப்பது இடபமண்டபம். இவ்விடபமண்டபத்தின் நடுவில் திரு நந்திதேவர் திருச் சந்நதி நோக்கிக் கிடக்கின்றார். இந்நந்தி தேவரைச் சூழ்ந்து நாற்பக்கமும் அணிதீபங்கள் அழகுசெய்து விளங்கும் இம்மண்டபத்தின் முன் கிழக்குமுகமாய்த் தாணுநாதர் எழுந்தருளிய * திருக்கர்ப்பஆலயம் இருக்கிறது. இந்த மூலவாலயத்தின் தென்பால் பெருமாளாலயமாம். இவ்வாலயத்துள் கன்னிதிசையில் திருக்கருடமூர்த்தியுறுவர். இவ்விரண்டாலயங்களும், வடக்கிடம் தெற்கிடம் என்று வழங்குவதோடு இவ்வாலயத்துள் எழுந்தருளிய மூர்த்திகளுக்குச் சிவதாணுமாலயப் பெருமான் எனவும், தென்திருவேங்கட விண்ணவரெம் பெருமான் எனவும்

* கர்ப்பஆலயம் என்பது-மூலஆலயமாகிய கர்ப்பக்ரகம்.

திருநாமங்கள் வழங்கிவருகின்றன. இந்த இரண்டாலயங்களிற் பூஜிக்கும் அர்ச்சகர்கள் மலையாளப் பார்ப்பனர் என்னும் நம்பூரிகளென்று சொல்லப்படுவர். இவர்களுள் இன்று வடக்கிடத்தாலயத்திற் பூஜிப்போர் நாளை தெற்கிடத்தாலயத்தும் இத்தெற்கிடத்தாலயத்தில் இன்றுபூஜிப்போர் அடுத்தமறுநாள் அவ்வடக்கிடத்தாலயத்தும் முறையாய் மாறிமாறிப் பூஜைபுரிந்து வருகிற ஒருவிசேஷமகிமை இவ்விரண்டாலயங்கட்கே அமைந்திருக்கின்றது.

இவ்விரண்டு திருவாலயங்களைச்சூழ்ந்து ஒருபிராகாரமுளது இதுமுதற்பிராகாரமாம். இதன் கன்னித்திசையில் திருப்பள்ளிகொண்ட பெருமாளாலயமிருக்கிறது. இவ்வாலயத்தின் வடபால், அப்பிராகாரத்தின் நடுவில் திருவிழாக் காலங்களில் எழுந்தருளும் மூர்த்திகளின் ஆலயமிருக்கிறது இதன் முன்னும் தெற்கிடம் வடக்கிடமாகிய இரண்டாலயங்களின் நடுவுமாகிய வெளிப்பக்கத்தில் வடபால் நோக்காய்ப்பிரம்மரூப விநாயகரும் இவ்விநாயக மூர்த்தியின் கீழ்பால் திசையில், மேல்பால் நோக்காகத்துர்க்காதேவியும், மேல் பாற்றிசையில் கிழக்குமுகமாக சங்கரநாராயண மூர்த்தியும் விளங்குவர். அப்பிராகாரத்தின் ஈசானதிசையில் சண்டேசுவர மூர்த்தியுறுவர். வடக்கிடத்தாலயத்தின் இடது பக்கத்தில் தென் பால் முகமாய்த் திருநடராஜ மூர்த்தியாலயம் விளங்குகிறது. தெற்கிடத்தாலயத்தின் வலது பக்கத்தில் திருமடப் பள்ளியமைந்துமிருக்கிறது. இம்மடப் பள்ளியின் தென் கீழ்பாற்றிசையில் குறுணிவிநாயகர் ஆலயமும், இவ்வாலயத்தின் முன் வசந்தமண்டபமும் பொலிவுற்று விளங்கும். இவ்வசந்த மண்டபத்தின்தென் மேற்றிசையில் கங்காளநாதர் கோயில் இருக்கிறது. இக்கோயிலின் பிற்பக்கமாகவும், தெற்கிடத்துப் பெருமாளாலயத்தை யடுத்த தென்பாலாகவும் அமைந்த ஒருகற்பாறைமீதே தென் கைலாயமென்ற ஆலயத்தைக் காணலாம். இவ்வாலயத்திறைவர் மேற்கு முகமாயெழுந்தருளியிருப்பர். இவ்வாலயத்தின் பிற்பக்கமும், தென்பக்கமும் விளங்குகிற கற்பாறைமீது சிலாசாஸனங்கள் பல காணப்படுகின்றன. முற்கூறிய அலங்கார

மண்டபத்தின் கீழ்பாற்றிசையில் கிழக்கு முகமாய் * அறம் வளர்த்த அன்னை ஆலயம் அமைந்திருக்கிறது. இவ்வாலயத்திற்கும் அலங்கார மண்டபத்திற்கும் மேல் பால் முருகப் பிரான் ஆலயமாம். இவ்வாலயத்தின் பிற்பக்கம் † 1. ஜெயந்தீசுவரர் ஆலயம், 2. ஜெயந்தீசுவர தேவி ஆலயம், 3. பால வுருவக் கண்ணபிரான் ஆலயம். 4. இராமேசுவரராலயம். 5. நாராயணேசுரராலயம் $ எனமுறையே தொடர்புற்று விளங்குகின்றன. இச்சிறந்த ஆலயங்களும், பெரிய மண்டபங்களும் வடக்கிடம் தெற்கிடம் என்ற இரண்டு மூல ஆலயங்களைச் சூழ்ந்து பொலிவுற்று விளங்குவனவாம்.

---

* அறம் வளர்த்த அன்னையாலயம் வந்த காரணம் இதுவாம். தேரூரின் வாழ்ந்த பள்ளியறை நாச்சியாரின் அருந்தவப் புதல்வியாய், சுசீந்தையிறைவன் திருவடிகளில் இடையறுப் பேரன்புடைய அறம்வளர்த்த நாச்சியாரென்னும் மாதுசிரோமணியார் கொல்லம் ஆண்டு 619-ல் மாசி மாதம் 17-ம் தியதி சோமவாரம் மகம் நாளில் சிவதாணுமாலய மூர்த்தி திருமுன் தெரிசித்து அவ்விறைவன் திருவருளாற் சாயுஜ்ஜியப் பேறெய்தினர். அப்பெறற்கு அரும்பேறடைந்த புண்ணியப் புதல்வியர்க்கு அன்னையாகிய பள்ளியறை நாச்சியார் முதலிய குடும்பத்தவர்களால் ஆலயம்அமைத்துப் பூஜையாதிகட்கு நிலங்கள் விடப்பட்டதென அன்னோர் வழிவந்தோர்களால் கொல்லம் 993-மாசிமதி 5 ல் இவ்வாலயத்திருத் தொண்டு புரியும் தலைவர்களின் முன் எழுதிவைத்தகைச் சீட்டாற் காணப்படுகிறது. இவ்வாலயத்திறைவன் அறம் வளர்த்த அன்னையாரைத்தனது பராசத்தியோடு சேர்த்தருளினமையால், இவர் அப்பேறெய்திய மாசித்திங்கள் தோறும் வரும் மகம் நாளில் இவரைத்திருமணம் புரியும் திருவிழா இவ்வாலயத்தில் நடைபெற்று வருகிறது. இத்திருவிழாக்கள் தோறும் இவர் அவதரித்த தேரூரில் இவரது நன் மரபினர்களாற் சிற்சில சிறப்புகள் இந்நாளும் முறையே நடைபெற்று வருகின்றன.

† ஜெயந்தீசுவர தேவியாலயம், ஜெயந்தீசுவரர் ஆலயம் ஆகிய இவ்விரண்டாலயங்களும் நெல்வேலிமடத்துப் பெரியார்களால் கொல்லம் ஆண்டு 768-ல் இயற்றப்பட்டதென்று சிலாசாஸனமுள்ளது.

$ இவ்வைந்தாலயங்களின் பெயர்களையறியாதார் இவற்றைப் பஞ்ச பாண்டவர் ஆலயங்களெனப் பகர்வர்.

இதுகாறுங் கூறப்பெற்ற ஆலயங்களையும், மண்டபங்களையும், சூழ்ந்து விளங்கும் பெரிய திருப்பலிமண்டபம் ஒன்றிருக்கிறது இம்மண்டபம் அற்புதப் பணிகள் அமைந்த அழகிய கற்றூண்களின் வரிசை முறையாற் சிறந்து விசாலித்தும், தென்பாலும் வடபாலும் மேல்பாலும் நடுவே பெரிய திருவாயில்களைக் கொண்டும் பொலி வுற்று விளங்குவதாம். இத்திருப்பலி மண்டபத்தின் தென் மேற்றிசையாகிய கன்னியில் அரிஅரபுத்திரர் ஆலயம் அமைந்திருக்கிறது. வடமேற் றிசையாகிய வாயு மூலையில் இளையபெருமாளும் மாருதியும் தம்கைகூப்பி வெளியிற் காத்து நிற்க, சீதாதேவியோடும் இராமபிரான் எழுந்தருளிய ஆலயம்இருக்கிறது. இவ்விராமபிரானையெதிர்நோக்கியவராய் வடகீழ்த்திசையில் திருப்பலிமண்டபத்தோடும் பொருந்தத் தோன்றும் விசுவரூபமுடைய திருஆஞ்சநேயர் ஆலயம் அமைந்திருக்கிறது. வடக்குவாயிலையடுத்த கீழ்பாலில் தென் முகமாயிருப்பது காலவைரவர் கோயிலாம். இவ்வைரவமூர்த்தி ஆலயத்துட்காவற் புரிவோராவர். ஆலயந்தொழ வருவோர் வடபால்த் திருவாயில்வழிவந்து முதலில் இவ்வைரவமூர்த்தியை வணங்கிச்செல்லும் வழக்கமிருந்து வருகிறது. முன்மொழியப் பெற்றகொன்றை யடியாலயத்திற்கும் கொடி மரங்கட்கும் வடபாலில் தென்முகமாய்ச் சிற்சபையொன்று சிறந்து விளங்கும். இச்சிற்சபை யானது சிவபெருமானுடைய அரூபநிலையைவிளங்கக் காட்டுமுறையாய்ச் சுத்தவெளியாகத் தோன்றும். இந்தச் சிற்சபையின்முன்வலப்பாலிற் சித்தி விநாயகரும் இடப்பாலில் குமரப்பிரானும் விளங்குவர். சுசிந்தையாலயம் அமைந்தமாண்பு இங்ஙனமாம்.

இப்பெரிய ஆலயத்தைச் சுற்றி திருத்தேரோடுந்தெரு வீதிஅழகாய்ச் சிறந்துவிளங்கும். இவ்வீதியின் கீழ்பாலாய் திருச்சந்நிதிமுன் 4–திருத்தேர்கள் நிலையுற்றுப் பொலிந்து விளங்கும். இப்பொற்றேர்கட்கு பிள்ளையார்தேர், சப்பரத் தேர், சுவாமிதேர், அம்மன்தேர் எனப்பெயர் வழங்கும்.

* திருவிழா நடைபெறும் காலத்து. 9-ம் திருநாட்காலையில் இறைவர் இத்தேர்களில் எழுந்தருளிவரும் காட்சியானது மிகச்சிறிதாம். தெற்குவீதியில் மேற்குமூலையில் தென்பால் நோக்கித் திரு நடராஜமூர்த்தி எழுந்தருளிய பேரம்பலம் அமைந்திருக்கிறது.

சுசிந்தையாலயத்திற்கு வடபால் இவ்வாலயம் எவ்வளவின தோ, அவ்வளவைக்கொண்டு; ஞானவாவியெனக் கூறப்படும் புண்ணியத் தீர்த்தமாகிய தெப்பக்குளம் பொருந்தியிருக்கிறது. இதன் நடுவில் ஒரு மண்டபமுண்டு இத்தெப்பக் குளத்தில், சித்திரைத்திருவிழா 10-ல் சுசிந்தை இறைவன் திருத்தெப் பத்தின்மீது எழுந்தருளிவரும் காட்சியானது கண்டோர் கண்களைக்கவரும் தன்மையாய்ச் சிறந்து விளங்கும். இத்தெப்பக் குளத்தின் வடபால் வடதிசை முகமாய்முந்நூற்று நங்கை யம்மன் கோயில் அமைந்திருக்கிறது. இக்காளி தேவியார் இப்பதியினைக் காவல் புரிந்துவருவர்.

சுசிந்தையாலயத்தில் மார்கழி மதியில் வரும் சதய நாளில் திருக்கொடியேற்றித்திருவாதிரை நாளளவுமாகிய 10 நாட்களில் நிகழும் திருவிழாச்சிறப்புகளைக் கண்டோர் இதுபோன்று இவ் வுலகில்யாண்டும் காண்டற்கரிதெனவியந்து புகழ்வர். இவ்வால யத்தில். இத்துணைத்தென்று கூறமுடியாதபெருஞ்சிறப்பினவாம் பல திருத்தொண்டுகளை. நாள் தோறும் மிகச்சிறந்து விளங்க இந்நாட்டு மன்னர்கள் இனிதியற்றிவருகின்றனர் என்பது. இவ் வுலகம் நன்கு அறிந்திருப்பதே.

---

* சுசிந்தையாலயத்தில் ஓராண்டுள்-மார்கழி, சித்திரை, ஆவணி இம்மூன்று மாதங்களில் மூன்று திருவிழாக்களும் மாசிமாதத்தில் திருக் கல்யாண மும் நடைபெற்று வருகின்றன.

## சுசிந்தையாலயத் தெரிசன முறை.

கிரந்தச்சுலோகத்தின் மொழிபெயர்ப்பு

பதினன்கு சீராசிரிய விருத்தம்.

சீர்ஞான வாவிதோய்ந் தணிநீறு பூசிவான்
திகழ்கோ புரத்தின் வழிபோய்த்
திருக்கொன்றை யடிதொழுது கொடிமரத் தடிதாழ்ந்து
திருவாயில் காக்கு மவரை
ஏர்மேவு கரிமுகனை யேத்தியத் தென்கயிலை
இறைஞ்சி யரி யரதனை யனை
இராமனைக் குகனைவை ரவனைப் பணிந்துபின்
எழிலறம் வளர்த்த அனையைக்
கார்மேக வாகனன் றெழுவிநா யகனைமாக்
கணபதியொ டயனுரு வமாம்
கணேசனைத் துர்க்கைசங் கரநாரணன்றனைக்
கருடனைத் தென்வேங் கடத்
தார்மேவு திருமாலை யரவணையி னனையச்
சண்டேச னடராஜனைத்
தருமிந்த முறைதொழுது நந்திமுன் னேநின்று
தாணுநா தற்பணி கவே. (1)

எழு சீராசிரிய விருத்தம்.

இனையசொன் முறையாய்ச் சுசிந்தையா லயத்தின்
இருபது மூர்த்திதா ளிறைஞ்சிக்
கனைகழல் விடைமுன் தாணுமா லயனைக்
கண்டுள முருகியப் பெருமான் (2)
புனைமல ரடிகள் போற்றுவோர் தமக்குப்
பொருந்தநல் லிகபர போகந்
தனைமகிழ்ந் தருள்வன் திருமூர்த்தி யுருவத்
தாணுநா தத்தனி முதல்வன்.

இச்சுசிந்தை யாலயத் தெரிசன முறையைப் பற்றி முன்னுள்ள ஒரு பெரியார் இயற்றிய 2 மணிப் பிரவாளச் சுலோகங்களை மலையாள மொழியில் இதனடியிற் காண்க.

പ്രജ്ഞാതീൎത്ഥേ കുളിച്ചങ്ങധിക ശുചികരം
ഗോപുര ത്തൂടേ ചെന്നാൽ
മുമ്പേകൊന്നായ്ക്കു നത്വാ ധ്വജബലി സഹിതം
ദ്വാരപാ ലഞ്ച വിഘ്നം
കൈലാസേ പാൎവ്വതീശം ഹരിഹര തനയം
രാമചന്ദ്രം കുമാരം
വന്ദേഹം ക്ഷേത്രപാലം ഹിമഗിരിതനയാം
ഇന്ദ്രവന്ദ്യം ഗണേശം. (1)

വിഘ്നം ദുൎഗ്ഗാം ഹരീശം ഖഗപതിനമിതം
മാധവം പത്മനാഭം
ചണ്ഡേശം താണ്ഡവേശം തൊഴുതു ഋഷഭനേ
സന്നിധൌ പുക്കു ചെന്നാൽ
കാണാം സ്ഥാണും ത്രിമൂൎത്ത്യാത്മക മഖിലജഗദ്
വന്ദ്യമനോരമേ താൻ
പാപം പോം പുണ്യമുണ്ടാം ഇഹഭുവിസുഖവും
നൽകീടും സ്ഥാണുനാഥൻ. (2)

---

# முன்னுரை.

## சிவபிரான் அருட்பெருமை.

அகண்டபரிபூரண சச்சிதானந்த சொரூபமாய், அநாதி மலமுத்தபதியாய்க் கருணைக்கடலாய் விளங்கும் பரசிவன், தமக்கோர் பயனும் கருதாது; ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு உலகங்களைப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் எனும் பஞ்சகிர்த்தியம் புரிவர். இவ்வைந்தொழிற் புரியவும், ஆன்மாக்கள் மனமொழிமெய்களால் தம்மை வழி பட்டுய்யவும், திருவுளங்கொண்டு மனவாக்கிற் கெட்டாமல் ஜீவசாட்சியாய், உயிர்க்குயிராய், எவ்வுயிர்ப்பாலும் நீக்கமற அந்தர் யாமியாய்க்கலந்த வுள்ளொளியாய்ப், பாலின் நெய் போல் தோன்றாது விளங்கும் அப்பரசிவன், தம்கருணைப் பெருக்கால் அருள்திருமேனி தாங்கித் திருவாலயங்களினும் மெய்யடியாரிடத்தும், புறத்தொளியாய்த்தயிரில் நெய் போல, தோன்றி விளங்குவர் என, வேதாகம புராணங்களாற் கூறப்படுகின்றன. சிவபரம்பொருளின் அருட்டிருமூர்த்தங்கள் 25– எனவும், பல்வேறுசமயத்தோர்க்குப்பற்பல மூர்த்தியாய்த் தோன்றி, எவர் எம் மூர்த்தியை வழிபடினும், அவர்க்கம் மூர்த்தியாய்ச் சிவபெருமானே நின்று அருட்புரிவரெனவும் சிவாகமங்கள் முறையிடும். அருள் மூர்த்தியாய்ச் சிவன் ஐந்தொழில் புரிவரென்பது,

> "தோற்றந் துடியதனிற் றோயுந்திதியமைப்பிற்
> சாற்றியிடு மங்கியிலே சங்காரம்— ஊற்றமிக
> ஊன்று மலர்ப்பதத்தே யுற்ற திரோதமுத்தி
> நான்ற மலர்ப்பதத்தே நாடு."

எனவுண்மை விளக்கத்தினும் "ஐந்து நலமிகு தொழில்களோடு நாடகம் நடிப்பன் நாதன்" எனச்சிவஞான சித்தியாரினும் கூறப்படுகிறது. பல மூர்த்தியாய் நின்று அருள்வதும் சிவனே யென்பது, "யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகியாங்கே மாதொருபாகனார் தாம் வருவர்." எனச் சிவஞான சித்தியினும், "அறிவினன் மிக்க அறுவகைச் சமயத்தவ்வவர்க் கங்கங்கே யாரருட்புரிந்து". எனச்சுந்தர மூர்த்தி நாயனார் தேவாரத்தும் கூறியிருப் பதாலமையும்.

# பரதகண்டத்து ஆலயப்பெருமை.



வேதம், வேதாந்தம், ஆகமம், புராணம், இதிகாசம், கலைஞானமாதிய நூற்களின் பெருக்கும், சைவ வைணவாதி ஆலயங்களின்பெருமையும், ஈசனையெக்காலமும் தியானித்துப் போற்றும் மெய்யடியார்களின் மிகுதியும், இமயமாதியன் மலைகள், கங்கையாதி பல நதிகள் எழில் செய்யப் பரந்த புவியழகும், உலகியலுக்கின்றியமையாத பற்பல வளங்களைத் தன்பாலுற்று, தற்போது சிறந்த வளநாடுகளெனக் கூறும் மற்றை நாடுகளிற் கிடைத்தற்கரிய பொருள்களை எந்நாளும் வழங்கிவரும் மாபெரு வளங்களின் பொலிவும், வடமொழி தென்மொழி ஹிந்தி முதலிய பற்பல தேச மொழிகளின் சிறப்பும், இவ்வுலகில் யாண்டும் காண்டற்கியலாத ஆன்மஞான வித்தையின் பிறப்பிடமாய் அவ்வித்தை பயின்ற மெய்ஞ் ஞானச்செல்வர்கள் அவதரித்த மேன்மையும், இன்னும்அனந்த மாபெருஞ் சிறப்புகளும் மல்கிப்பொலிந்து விளங்கும் காரணத் தால்புண்ணிய பூமியெனப்புகழ்பெற்ற இப்பரதகண்டத்தில் 1008– சிவாலயங்களும் 108– திருமால் திருப்பதிகளும் உள்ளனவென்று ஆன்றோர்களால் தொன்று தொட்டே மொழியப் பட்டுவருகிறது.

இவ்வாலயங்களுள் திருமால் திருப்பதிகளாகிய ஒரு நூற்றெட்டும், நாராயணன் நல்லருட்செல்வராம் பொய்கை யாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் எனும் முன் ஆழ்வார் மூவர் மொழிந்தருளிய திருவந்தாதிகளையும், சடகோபர் முதலிய பின் ஆழ்வார்களால் அருளிச்செய்யப்பட்ட திருவாய் மொழி நாலாயிரப்பிரபந்தமாதிய அருணூற்களையும் பெற்று விளங்குவனவாம். இனிச் சிவாலயங்கள் ஆயிரத் தெட்டினை ஆராய்வாம். சைவசமயாசிரியர்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர்,திருவாரூர் என்னும் இம்மூவர் திருவாய்மலர்ந்த தேவாரப்பதிகங்களையுடையனவாய் "ஆகஇருநூற்றெழுபான்

நான்கென்பர் மூவரருட்பதிகமிருக்குமூர் அதிகமாம் வைப்பு" எனச் சிவதிருப்பதிக் கோவையிற் கூறப்படுகிறது. இம்முறையாய் 274—சிவாலயங்களும் வைப்புத்தலங்களாய்ச் சில ஆலயங்களுமாமென அம்மூவர் அருட்பாவாலும் காணத்தகும். இதனால் அம்மூவர் பாடல் பெறுதபதிகள் அனந்தமுள்ளன வெனத் தோன்றுகின்றனவன்றோ! எனின் சிதம்பரத்திற் கனகசபையின் மேல்பாலுறும் ஓர் அறையில் மூவர் பாடல்கள் சேமித்திருந்தனவெனத்திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையார் திருவருள்பெற்ற நம்பியாண்டார் நம்பி அருளியவழியாய் அறிந்த அபய குலசேகரச்சோழவரசனால் அவ்வறைதிறந்து நோக்குங் காலத்து, அளவற்ற ஏடுகள் வன்மீகம் மூடி அழிவுற்றிருந்தன. அதுகண்டு வருந்திய சோழன்மனம்மகிழுமாறு நடராஜமூர்த்தி திருவருளால் "ஈண்டு வேண்டுவன வைத்தோம்" என்றோரசரிரி வார்த்தை யுண்டானது. அம்மொழி கேட்டு மனமகிழ்வுற்ற அச்சோழ மன்னன் அப்போதிருந்த அத்திருப் பாடல்களை உலகமுய்யவெளிப் படுத்தினன், எனத்திருமுறைகண்ட புராணத்திற் கூறப்படுகிறது. இவ்வாற்றால் மற்றெழுநூற்றிற்கு மேற்பட்டசிவாலயங்கள் மூவர் பாடல்பெற்று அப்பாடல்கள் அழிவுற்திருக்கலாமென்று ஊகித்தற் கிடனாயிருக்கிறது. அதிகமாம் வைப்புஎன்றது. சமயாசிரியர்மூவரும் சிலதலங்களை தங்கள்மனத்துள் நினைந்து பதிகம்கூறிவைப்புத்தலங்களெனப் பெயர்வைத்தனர். இதுவடதிசையில் திருக்கைலாயமாதி தலங்கட்கும், தென்றிசையில் ஈழநாட்டுப்பதிகட்கும் வைப்புத்தலப்பதிகம் கூறியருளியதாய் இம் மூவர்சரிதத்தில் சேக்கிழார்அருளிச் செய்திருப்பதால் விளங்கும்.

---

## தமிழ் நாட்டாலயப்பெருமை.

சேர. சோழபாண்டியர்களால் அரசாளப்பெற்று சீராற் சிறந்து விளங்கும் தமிழ் நாட்டில், அதிஅற்புதத் திருவிளையாடல்கள் நிகழ்ந்தனவும், மூர்த்திதலம் தீர்த்தமாதி மாண்புடையனவும், மூவர் அருட்பாடல் பெற்றனவுமாகிய புண்ணியச்

சிவாலயங்கள் அனந்தமுள்ளன. அவற்றுள், சோழவள நாட்டில் காவேரியின் தென்பாலும் வடபாலுமாக, "மன்னு மீங்கோய் மலையினோடறுபான்மூன்றே வடசரையில்' எனவும். "தென்கரையில் எண்டருநூற்றிருபத்தேழெனவும்." பாண்டி நாட்டினும் சேரநாட்டினுமாக, "பாலலோசனன் றிருநெல்வேலி யொடு பாண்டி பதிநான்கு மலைநாட்டிலஞ்சைக்களமொன்றே" எனவும் தமிழ்நாட்டாலயங்களை வகுத்துச் சிவதிருப்பதிக் கோவையிற் கூறப்படுகிறது. இம்முறையாய்ச் சோணாட்டில் 190 ஆலயங்களும் பாண்டிநாட்டில் 14 ஆலயங்களும் பாடல் பெற்றனவாம். சேரநாட்டில் திருவஞ்சைக்களம் ஒன்றே பாடல்பெற்று மற்றுள ஆலயங்கள் முற்கூறிய மாண்புடையன வாயிருந்தும், அம்மூவர் பாடல் பெறாதிருந்தமை அதிசயமே. இங்கோர்கேள்வி; மூவர்பாடல்பெற்ற தலங்களுக்கு என்ன விசேஷமுள்ளது! எனின், உலகுய்யத்திரு அவதாரஞ்செய்தரு ளிய இச்சமயாசிரியர்கள் திருவாலயங்களிற் சென்று வலம் வந்து வணங்கி, இடையறுப்பேரன்பால் அழலிடைப்பட்ட மெழுகு போற்றம்மனம் கசிந்துருக இருகண்ணீர் பொழியச்சிவானந்தம் பெருக, தற்போதமகன்று திருவருண்மயமாய்த் திருமுன் நின்று தெரிசித்து; சிவனருள் உள்ளே பொங்கி வடிந்தாற் போல மூவர் மொழிந்தருளிய அருட்பாக்களானமையாலும், இப்பாக்கள் இத்துணைத்தென்று கூறரிய அற்புதம் வாய்ந்தன வாதலாலும்; "எரியினிடை வேவாதாற்றெதிரேயோடும் மென் பிற்கு முயிர் கொடுக்கும் இடிநஞ்சாற்றுங் கரியை வளைவிக்குங் கன்மிதப்பப் பண்ணுங் கராமதலை கரையினுறக் காற்றுங் காணே." எனத் திரு முறைகண்ட புராணத்திற் கூறும் மகிமையுடைய இவ்வருட்பாதன்னையோதுவோர் கேட்போரை "சித்தமெலாம் உருக்கு தமிழ்த்தேவாரம்" என்றமொழிப்படி தங்கள் மனங்கசிந்து மெய்சிலிர்த்துக் கண்ணீர்மல்க அன்பு உருவாக்கி முத்தியளிக்க வல்லதாலும்; ஆன்றோர்களால் அம் மூவர் அருட்பாவிற்குத் தமிழ் மறையெனப் பெயர் வழங்கி, ஆலயங்களில் ஓதும் உத்தமோத்தமத்தேவாரங்களாய்ப்போற்றி வருவதாலும் என்க. இதுவன்றியும், "ஒழித்திடும் பவப்பகை

விரைந்துள்ளமே யோது மூதுணர்வோர் முற்பழிச்சுபாடலே அரர்க்கவை விடர்க்கிளம் பாவையருரைபோலும் கழித்திடே லுபசாரமென்றிதனை நீ கட்டுரை யெனக் கொள்வாய்" என வைராக்கிய சதகத்திற் கூறியவாறு, காமுகன் செவிக்கு இளங் கன்னியர் மொழியினித்தாற் போலச் சிவபிரானுக்கினிமையைச் செய்வதினாலும், மூவர் அருட்பாடல் பெற்ற தலங்களில் எம்பெருமான் விசேஷத் திருவருளோடு விளங்கி வழிபடும் அடியார்க்குத் திருக்கருணைபுரிந்து நிற்பதுமேயாம்.

---

## மலை நாட்டாலய மகிமை.



சேரநாடாகிய இம்மலைநாட்டுச் சிவாலயங்களுள் தலை சிறந்து தென்கைலாயமெனப் புகழ்பெற்ற திருச்சுசிந்தையால யத்தோடு, இவ்வாலயத்தைச் சூழ்ந்துவிளங்கும் நாஞ்சில்நாட்டினை சேரசோழபாண்டியர், விஜயநகரத்துமன்னர், திருமலைநாய்க்கன் முதலியபலவரசர்கள் முன்னாட்களில் ஆண்டுவந்தார்கள் என் பதற் கேற்றசான்றுகள் பலவுள்ளன. சிலாசாஸனங்களும். வேறுபலகாரணங்களும் அச்சான்றினை விளக்கும். அவ்வரசர்கள் நாஞ்சினாட்டையாண்டு, சுசிந்தையாலயத்திற் பலதிருப்பணிகள் இயற்றினமைக் கறிகுறியாய், இவ்வாலயத்தில் அன்னவர்களின் உருவச்சிலைகளும், பலசிலாசாஸனங்களும் காணப்படுகின்றன. அன்றியும் (1) சோழபாண்டி நாட்டிலுள்ள திருவிழாமுறைகள் சுசிந்தையாலயத்தில் நடைபெற்றுவருவதோடு, அந்நாட்டுப் பெரிய மடாலயங்களைச் சேர்ந்தமடங்களும் இங்குறுகின்றன. (2) சோழபுரம், பூதப்பாண்டி, அழகியபாண்டியபுரம், மும்முடிச் சோழபுரமாகிய கோட்டாறு எனநாஞ்சினாட்டிற் சிலவூர்ப் பெயர்கள் அமைந்திருக்கின்றன. (3) பாண்டியர்களாற் கட்டப் பெற்றகாரணத்தாற் பாண்டியன் அணையெனவும், பாண்டியன் காலெனவும் பெயர்பெற்றிருப் பனவாதி பற்பலகாரணங்களும் உள்ளனவாம்.

நன்செய் நாட்டைப் பாண்டியயரசரும் மலைநாட்டு மன்னரும் தத்தமக்கென வாதித்து நின்றனர். இவ்வாதத்தினை முடிவுசெய்தற்பொருட்டு அவ்விரு வேந்தரும் சேர்ந்து, இந்நன் செய்நாட்டு மாந்தர்களை நோக்கி உங்களை யார்புரந்து வருகின்றனர், எவர் குடிகளாய் வாழ்தல் நுங்கள் கருத்தெனக் கேட்ப, மங்கலம்முதல் மணக்குடிவரையுமாகிய பன்னிரு பகுதியூர்களில் வாழும் இந்நாஞ்சினாட்டோர் கடுக்கரையூரிற் கூடியிருந்து மலைநாட்டரசரே தங்கள் மன்னரெனவும், அவர் தண்குடை நிழலிற்றங்கியிருப்பதே தமக்கு நலமெனவும் உறுதிசெய்துகொண்டு; சுசிந்தையாலயத்தின் முன்வந்து உண்மைசெய்த அந்நாள் முதல் மலைநாட்டரசரே இந்நன்செய் நாட்டைச் சிறப்பாயாண்டு வருகின்றனரென இந்நாட்டிற் பலர் கூறுவர். இதுவன்றி, நாஞ்சினாட்டையாண்ட இராஜசிங்கபாண்டியனை மலைநாட்டரசர்வென்று நாஞ்சினாடும், கோட்டாறும் கைக்கொண்டனரெனப் பாண்டியனணையிற் பொறித்த சிலாசாஸனமும் கூறுகிறது. அது கீழ்வருமாறு:— "எத்திசையும் புகழ்படைத்த கொல்லம் இருநூற்றுத் தொண்ணூற்றியெட்டாமாண்டு வெற்றிசெயுங் கும்பத்தில் வியாழனின்ற விளங்குதிங்களாவணிபன் ஞென்றுந் தேதி தண்ணிவிழும் பறளையாற்றணையுந்தள்ளித் தமிழ்ப்பாண்டி ராஜசிங்கன்றனையும் வென்று கொத்தலரும் பூஞ்சோலை நாஞ்சினாடும் கோட்டாறுங் கூவையர்கோன் கொண்டவாறே." இச்சிலாசாஸனத்தால் நாஞ்சினாடு மலைநாட்டுமன்னர் ஆட்சியினுற்று 817 ஆண்டுகளாயிற்று. மேலும் சேரர்குலப்பெருமாக்கன்மார் காலத்தில் நாஞ்சினாடு நாஞ்சிக்குறவனிடத்திருக்க அந்நாள் அக்குறவர்க்கு இந்நாட்டின் வடபாற் சில இடங்களைக் கொடுத்து நாஞ்சினாடு மலைநாட்டோடு சேர்க்கப்பெற்றதென இம்மலைநாட்டுச் சரித்திரமும் கூறுநிற்கும். இவ்வற்றால் இற்றைக்குப் பல ஆண்டுகட்குமுன் தமிழ்வேந்தராதி பல அரசர்கள் நாஞ்சினாட்டை யாண்டுவந்தனரெனத் தெள்ளிதின் விளங்கும். பாண்டிமன்னர் காலத்தில் நாஞ்சினாடு பாண்டிநாடாய் விளங்கியிருந்தும் இந்நாட்டிலுள்ள மாபெரும் புண்ணியத்தலங்களாகிய, சுசீந்திரம், பூதப்பாண்டி முதலிய ஆலயங்கள் அம்மூவர் பாடல்பெறுதிருந்தமை யாது காரணமென்பது அறிதற்கரிய பெரியதோரதிசயமே.

நல்வளம் பெருக்கும் நெல்வளமிகுந்த நாஞ்சினாட்டைப் பாண்டியர்முதற் பல அரசர் ஆண்டுவந்த அந்நாளினும் பற்பல மடங்கு சிறிற்சிறந்துவிளங்க இம்மலைநாட்டுமன்னர் ஆட்சி புரிந்து வந்தனரென்னும் விசேஷம் இங்கு கவனிக்கற்பாலது. இதற்குச் சான்றுபகரின்

"குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கு முலகு." என்ற திருவள்ளுவர் திருமொழிக்கிணங்கச் சீரியசெங்கோன்முறை புரிந்து காலஞ் சென்ற மூலம்திருநாள் மன்னர் நாஞ்சினாட்டைத் தமது நெற் களஞ்சியமாய்த் திருவுளத்தெண்ணி, இந்நன்செய் நாட்டுநன் செய்கள் வாட்டமின்றிச் செழித்தோங்கி நெல்வளம் பொலிந் தெந்நாளும் தந்துநிற்குமாறு, பாண்டியன் அணையினும் பற்பல மடங்குயர்ந்ததும், கடல்போற் பரந்த நீர்ப்பெருக்குடையது மாகிய பேச்சிபாறைப் பேரணையினைக் கட்டுவித்தமையேசா லும். அன்றியும், ஈசனிடத்து அளவிலாப்பேரன்புடைய இம் மன்னர் இம்மலை நாட்டாலயங்கள் என்றும் அழியாச்சிறப்பின வாய் விளங்கிநிற்கத் தமது செங்கோன்முறையாலீட்டும் பொருள்களில், ஒரு சிறந்த பொற்றொகையினை ஆலயங்கட் கென்றே கொடுத்தருளியும், இவ்வாலயபரிபாலன முறைகள் தமக்குப் பின் ஆட்சிபுரிபவர்களால் மேன்மேலோங்கிச் சிறந்து விளங்குமாறு, இராஜவிளம்பரம் செய்தருளியும், காத்தமை உலகம் போற்றிப் புகழ்வற்குரியதாம். இவைநிற்க.

---

## இந்நூல் இயற்றிய முறைமை.

சைவசமயாசிரியர்கள் தேவாரப்பதிகம் கூறியதாய்க் காணப்பெறாத இவ்வொன்று தவிர மற்றெல்லா மாபெருஞ் சிறப்புகள் ஒருங்கமையப்பெற்ற திருச்சுசிந்தை யாலயத்தில் மலைநாட்டு மன்னர்பெருமான்களால் மார்கழிமதி தோறும் பெருஞ்சிறப்பாய் நடத்திவரும் திருவிழாக்களில், சென்ற மார்கழித்திருவிழாவைத் தரிசிக்க யான் சில நண்பர்களுடன்

சென்றிருந்தேன். அப்பொழுது ஒரு நண்பர் இத்திருவிழா மாண்பை விளக்கிப் பாடல்கள் இயற்றுமாறு என்னிடம் உரைத்தார். அது கேட்டு மார்கழித்திருவிழா மாண்பெனச் சில பாக்களை அந்நாள் இயற்றினேன்.

அதற்பின், மார்கழி மதியின் மகிமையும், அம்மதியில் வரும் திருவாதிரை மகிமையும், அத்திருவாதிரைநாளை ஈறுகக் கொண்டு திருவிழாநடைபெறும் சுசிந்தையாலய மகிமையும், முற்கூறிய அத்திருவிழாமாண்புக்கு முன் முறைமைபற்றிக் கூறவேண்டியது ஒருதலையாய் இன்றியமையாததெனஎன் சித்தத்தில் தோன்றியது. அதுகாரணமாய், முத்தமிழ்க்கவிராயரவர்கள் இயற்றிய சுசீந்திரத் தலபுராணத்தினை ஆராய்ந்து அதிலுள்ள 30 சருக்கங்களில் சுசீந்திரவிஷயமான 15 சருக்கங்களை 8 மகிமைகளாய்த் தொகுத்தும், அப் புராணத்திலுள்ள சிறந்ததோத்திரவடிமான பாடல்களை எடுத்தாண்டும், சுசிந்தையாலயச் சிலாசாஸனவிஷயங்களைச்சேர்த்தும் இயற்றிய இந்நூற்குச் சுசிந்தை மான்மியம் எனப் பெயரமைத்து முன்னிற்கவைத்தேன்.

அத்துடன் முறையாய் மார்கழிமாத மகிமையை விளக்கக் கருதி, சிவபுராணங்களிலும் தேவாரம் திருவாசகம் முதலிய அருள் நூற்களிலும் ஆங்காங்கே ஒவ்வோரிடங்களில் தனுமதி மாண்பைக்கூறியிருக்கின்றன அன்றி, அம்மதி மாண்பினை ஒரு வழிப்படுத்திக்கூறும் நூல்ஒன்றேனும் இதுகாறும் வெளிப்படக் காணேம் ஆதலின், இந்நாளிலேனும் ஒருசிறுநூல் வெளிப்பட்டிருப்பின் சிவநேசச் செல்வர்களாம் அன்பர்கட்கு, இத்தனுமதி மாண்பும் ஆதிரைமகிமையும், இவ்வாதிரைநாள் நோன்பின் முறையும் பயனும், எளிதினுணர்ந்து கொள்வதற்கிடனுமென் றெண்ணி, அந்நூற்களைப் பன்னாட்களாய் ஆராய்ந்து மார்கழி மதிமாண்பு என ஒரு பிரபந்தமும், இம்மாதத்தில் சுசிந்தை ஆலயத்தின் நிகழும் திருவிழாச்சிறப்பை மார்கழித்திருவிழா மாண்பு என 2-ஆம் பிரபந்தமாகவும் அமைத்துளேன்.

மும்மூர்த்திகளும் சேர்ந்தொரு மூர்த்தியாய்த் திகழும் முழுமுதற் கடவுளாகிய சிவதாணு நாதர் திருவடித்தாமரைகளிடத்தே நீடித்த மெய்யன்புடையேமாய் அமையுமாறு விரும்பி, அப்பெருமான் திருவடிமலர்களைப் போற்றிப் புகழ்ந்து சிவதாணு வந்தாதியென 3–ஆம் பிரபந்தமாகவும் முறையாய் நிற்கும்படி அமைத்து, ஒல்லும்வகை யென்னறிவிற்கு யெட்டிய அளவிற்புனைந்துரைத்த இந்நூலை,

"குணம்நாடிக் குற்றமும் நாடி யவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல்". என்னும் திருவள்ளுவர் திருமொழிக்கிணங்க அறிவால் பெரிய ஆன்றோர்கள் ஆதரித்து, யேற்றுக்கொள்ளுமாறு மிகுந்த அன்பான வணக்கத்துடன் வேண்டுகின்றேன்.

ஆக்கியோன்.

---

உ

சிவமயம்.



# சுசிந்தை மான்மியம்.

## கடவுள் வணக்கம்.

### இந்திரவிநாயகர் துதி.

சீர்மேவு சிவதாணு மாலயனுந் திருநாமஞ்
சேர்ந்த வீசன்
பார்மேவு சுசிந்தையெனும் பதிமேவி விளங்கியருட்
பண்பைச் சாற்றத்
தார்மேவு திருமார்பு மைங்கரமும் அருணைக்குந்
தங்கும் மேனி
ஏர்மேவு மானமுகத் திந்திரவி நாயகன்றாள்
யேத்து வோமே. (1)

### சிவதாணுநாதர் துதி.

மந்திரந் திகழ் மாமறை யோதிநின்
றிந்திரன் றொழு தேத்துஞ் சுசிந்தையின்
முந்தரன் முத லோரொரு மூர்த்தியாஞ்
சுந்தரன் பதஞ் சென்னியிற் சூடுவாம். (2)

### திருக்கொன்றையடித் துதி.

முன்றி கழ்ந்த முதலுக மேமுதற்
றுன்று மோருகத் தோர்தருத் தோற்றமாய்
நின்ற மாத்தரு நீள்கவி தன்னிற்பூங்
கொன்றை யாய்த்திகழ் கோனடி போற்றுவாம். (3)

முக்குறுணி விநாயகர் துதி.

நேரிசை வெண்பா.

வேதங்கள் போற்றும் மிகுபிரண வப்பொருளே
† மாதங் மாமுகனே * மாதங்கும்— பாதங்கள்
சிந்தை யுறப்பணிந்தேன் தென்சுசிந்தை மான்மியத்தைச்
செந்தமிழிற் செய்யவருள் செய். (4)

பிரமன் உருவக் கணபதி துதி.

சீர்கொண்ட பொன்னுலகாள் தேவர்கோன் வந்துபணிந்
தேர்கொண்ட காயசுசி யெய்தவருள்—தார்கொண்ட
மும்மூர்த்தி யான முதலைத் துதிப்பவைங்
கைம்மூத்தி யானடியே காப்பு. (5)

தெற்கிடத்துத் தென்திருவேங்கடப் பெருமாள் துதி.

எழுசீர் ஆசிரிய விருத்தம்.

முன்னொரு போதின் மும்மதக் களிறோர்
முதலைவாய்ப் பட்டுடல் வருந்தித்
தன்னெடுங் கரத்தை நீட்டியுள் ளன்பாய்த்
தயைபுரிந் தருளென வழைப்பப்
பொன்னொளிர் கலுழன் புயமிசைப் பொலிந்து
பொரு $ கராக் கொன்றருள் புரிந்த
மின்னொளிர் முகிலாய்ச் சுசிந்தைவாழ் பெருமாள்
விரைமலர்க் கழல்பணிகுதுமே. (6)

திரு நடராஜமூர்த்தி துதி வெண்பா,

‡ உண்மையறி வானந்த மோங்குமுருக் கொண்டுபுனற்
றண்மையனல் வெம்மையெனத் தற்பிரியாப்—பெண்மையெனும்
ஆதிசத்தி காணச்சிற் றம்பலத்தி லாடுநன்றாட்
போதுதலை மீதணியும் பூ. (7)

---

† மாதங்கம் = யானை. * மாதங்கும் = பெருமைபொருந்திய.

$ கரா = முதலை.

‡ உண்மையறிவானந்தம் — சத்துச் சித்து ஆனந்தம்

## திரு முருகப்பிரான் துதி.

கட்டளைக் கலித்துறை.

திருமால் மருகனைச் சீர்வள்ளி நாதனைத் தென்சுசிந்தைப்
பெருமா னுதற்கண் ணருண்மணிச் சண்முகப் பேர்மணியைக்
கரிமா முகற்கிளை யோனைக் குகனைக் கலாபமயில்
வருமா முருகனை வேலா யுதனை வணங்குதுமே. (8)

## அறம் வளர்த்த அன்னை துதி.

தேவர்பணி யுந்தேவ தேவனுஞ் சிவதாணு
திருமருங் குற்ற தேவி.
மூவர்பணி யென்னுமுத் தொழிலோடு மெண்ணான்கு
மூதறம் வளர்த்த முதல்வி
ஏவர் பணி யுங்கொண்டு தருமாதி யொருநாலு
மினிதருளும் மெங்க ளிறைவி
பூவனைய மெல்லடி போற்றலென் கடனருள்
புரிவதுன் கடமை யாமே. (9)

## முந்நூற்று நங்கை அன்னை துதி.

எண்சீர் ஆசிரிய விருத்தம்.

† நன்னூற்றுப் பத்துடனே யோரெட் டென்ன
நவின்றிடுமா லயங்களிலே சுசிந்தை நாதன்
பொன்னூற்ற முறவாழும் புயலும் அயனும்
பொருந்துமொரு மூர்த்தியாய் அடியார் பொற்றிப்
பன்னூற்றுன் னுகமங்கள் மறையோ டேத்தும்
படியுறையா லயத்துவட பாலாம் அன்னை
முந்நூற்று நங்கைமலர் அடிகள் யேத்தி
முன்னவனற் புகழினையே மொழியலுற்றும் (10)

## சமயாசிரியர் முதலாகிய அடியார் துதி.

செய்யபெரு நான்மறையின் பொருள்க ளெல்லாம்
தேவாரப் பதிகமாய்த் தெரிக்க செல்வத்
துய்யதிரு ஞானசம் பந்தர் அப்பர்
சுந்தரரிம் மூவரடித் துணைகள் போற்றி
வையமெலா முய்யதிரு வாச கத்தேன்
வழங்குமணி வாசகர்தாண் மலர்கள் போற்றி
ஐயன்மழுக் கையனடிக் கன்பு பூண்ட
அடியவர்தா மரையடிகள் முடிமேற் கொள்வாம். (11)

---

† நன்னூற்றுப்பத்து = நல் = நல்ல. நூற்றுப்பத்து × ஓராயிரம்.

## இந்நூலை இறைவன் திருவடிக்கணிதல்.

வெண்பா.

தென்சுசிந்தை வாழுஞ் சிவதாணு மாலயனே
என்சொலினல் நின்சீர் இயம்பரிதா—லென்சித்தத்
தின்னருளே யேவ இயற்றினனிப் பாமாலை
நின்னடியின் மன்னவருள் நீ. (12)

அவையடக்கம்.

எழுசீர் ஆசிரிய விருத்தம்.

மையுறு மீனக் கண்ணுமை நாதன்
மான்மழு வேந்திய கரத்தன்
பையுறு பாந்தள் அணிசிவ தாணு
பயில்புகழ் மென்மொழி யால்யான்
மெய்யுறு நாட்டத் தறிஞர்முன் னுரைத்தல்
மிருகலைச் சசியின்முன் னிசியின்
நொய்யுறு மொருமின் மினிவிளங் குதல்போல்
நுவன்றிடத் தக்கதே யாமால். (13)

புன்புலா லுணவும் * திண்ணனர் கனிவாய்
பொருந்திநற் றூய்மையாப் பொருவில்
இன்பமாய் அமரர் அமுதினும் மேலா
யீசனுக் கானபோ லெனது
புன்கவி யிவையும் புலவர்மாச் செவியிற்
புகழிறை பொருட்டினாற் புகுந்து
நன்கவி யாகிச் சுசிந்தையில் தாணு
நாதனர்க் கினியதா மன்றோ. (14)

ஆகச் செய்யுள் (14)

---

* திண்ணனர் — கண்ணப்பநாயனர்.

# தமிழ்நாட்டுச் சிறப்பு.

இவ்வுல கமைந்த கண்டமோர் நவமாம்
இப்பெருங் கண்டங்க ளுள்ளே
எவ்வுல கத்தோர் யாவரும் புகழும்
யெழிலுறு பாரத கண்டம்
செவ்விய வளத்தா லான்மஞா னத்தாற்
சீரினுற் சிறப்புறத் திகழும்
அவ்வியல் கண்டத் தணிதமிழ் நாடே
அளப்பருஞ் சிறப்புடைத் தாமால். (1)

அத்தமிழ் நாட்டிற் சிவபிரான் திருமால்
அறுமுகன் முதலிறை யவர்கள்
நித்தமும் அடியார்க் கருள்புரிந் துறையும்
நீள்பதி பலவுநன் குறீலான்
முத்தமிழ் நாடே சிறப்புடைத் திதைமுன்
முறைபுரிந் தாண்டமூ வரினும்
இத்தரை மாந்தர் சேரனை முதல்வைத்
தெண்ணலாற் சிறந்தவ னிவனே. (2)

## சேரநாட்டுச் சிறப்பு.

சிறந்திடுஞ் சேரர் வழிவரும் மன்னர்
திகழ்மலை நாட்டினிற் செங்கோல்
அறந்திகழ்ந் தோங்கப் புரிவரிந் நாளும்
அணிதிரு வனந்தையே முதன்மால்
உறைதிருப் பதிக ளோர்பதின் மூன்றும்
உயர்சைவக் குரவர்தா மோதப்
பெறுமொரு பதியுஞ் சுசிந்தையா தியவும்
பீடுறப் பொலிவதிந் நாடே. (3)

சுராமு தனைய தமிழ்மறை மொழிந்த
சுந்தர மூர்த்திதன் றோழ
நரபதி யெனுஞ்சே ரலனிடம் மதுரை
நாதரே அருள்திரு முகப்பா
சுரமதிற் புகழ்ந்த சேரமன் நாடே
தொன்மறைச் சிரப்பொருள் விளக்க
அரனரு ளுருவாஞ் சங்கரக் குரவன்
அவனியி லுதித்தநன் னடாம். (4)

சேரமன் பெருமா ளெனுஞ்சிவ னடியார்
திருக்குல சேகர ஆழ்வார்
சீரணி பொருள்சேர் $ சிலப்பதி காரம்
செய்தவர் செங்குன் றூர்ப் பிறந்த
ஏரணி வேளாண் குலவிறன் மிண்டர்
* யெழிற்சட கோபனை யீன்றாள்
தாரணி வேணாட் டடிகளித் தகையோர்
தமைமுனந் தந்ததிந் நாடே. (5)

துங்கமா மலைகள் தரும்வளத் துடனே
தொடுகடல் வளமுமீக் குயர்ந்து
தங்குமிந் நாடு தருபொரு ளேற்றுத்
தாங்கொடு வருபொரு ளீயும்
வங்கமார் † குளச்செய் யாதிநான் கிடத்து
வயங்குமாத் துறைமுகம் பெற்ற
பொங்கொலி மிகுதென் கடலிரு மருங்கும்
பொருந்திய புனிதநன் னாடு. (6)

இஞ்சிநன் மிளகும் யேலமும் சுக்கும்
யெழிலுறுஞ் சந்தகில் தேக்கும்
குஞ்சரக் கோடுந் தந்தமும் பிறவும்
குவலயத் தரியபல் பொருளும்
எஞ்சலில் இனைய நாடுபல் திசைக்கும்
இருங்கலத் தேற்றுமே விந்த
வஞ்சிநன் னாட்டின் மாவள மாண்பை
வகுத்துரைத் திடுவது மெளிதோ. (7)

தேவரும் புகழும் தென்றமிழ் முனிவன்
திருப்பெயர் விளங்குநன் மலையும்
பூவருஞ் சோலைத் தென்றலின் பொலிவும்
பொருந்திய சாரலுங் குரவர்
பாவரும் பதிக மோதிய பதியாப்
பயில்திரு வஞ்சையங் களமும்
மேவிய வெழிலார் மலைவள நாடே
மேதகு சிறப்புடைத் தம்மா. (8)

ஆகச் செய்யுள் (8)

---

$ சிலப்பதிகாரம் செய்தவர் = இளங்கோவடிகள்.

* சடகோபனை யீன்றாள் = நம்மாழ்வாரைப்பெற்ற தாயார்.

† குளச்செய் — குளச்சல் யென்னுமூராம்.

# சுசிந்தை மாநகர்ச் சிறப்பு.



இன்னமாண் புடைய சேரநா டதுதான்
இலகிடுந் தென்வட பாலாய்
மன்னிய தென்பா லுறுந்திணை நான்கின்
மருதநற் றிணையென வழங்கும்
நன்னய நன்செய் நிலவளம் மிகுந்த
* நாஞ்சினா டுறையுமிந் நாட்டின்
பொன்னொளிர் திலக மெனத்திருச் சுசிந்தைப்
பொன்னக ரெனும்நகர் பொலியும். (1)

பொங்குநெல் வளமே முதற்பல வளமும்
பொருந்திய $ நன்செய்நா டென்னும்
மங்கையங் கரமும் வனமுலை யிணைத்தோள்
மணிவயி றுதிய வடிவ
அங்கமாம் புறத்திற் றழுவிநின் றொளிர்வ
தாகிய நகரங்க ளனைய
நங்கைமா முகமாம் சுசிந்தையம் முகத்தின்
நயனமாம் நாதர்பொற் கோயில் (2)

விரிந்தவிப் புவிமா மடந்தைதன் மார்பின்
விளங்குபொன் னாரமிந் நாடு
பொருந்திய நாஞ்சி னாடதிற் புனைந்த
பொற்புறு பதக்கமப் பதக்கத்
திருந்தபன் மணியாம் புறநக ரங்கள்
இதனடு நாயக மணியாய்
திருந்தெழில் மிகுந்த தென்றிருச் சுசிந்தைத்
திருநகர் பொலிந்திடுஞ் சிறந்தே (3)

---

* நாஞ்சினாடு = நாஞ்சில் நாடு எனப்பிரியும், நாஞ்சில் = கலப்பை இக்கலப்பைக் கொழுமுனையால் வளம் பெருக்கும் நாடென்று பொருளாகிறது.

$ நன்செய்நாடு = என்பது கழனி நிலங்கள் சூழ்ந்தநாடு.

திருவரு ளுருவாய்ச் சிவபிரா னுறையுஞ்
சீர்வட கயிலையிற் சிறந்து
மருவிய சுசிந்தை யாலயம் புவியோர்
வணங்குதென் கைலையாய் வழுத்தும்
பெரியவிக் கோயி லுறைதிருப் பதியின்
பீடுறு மாண்பெலாம் பேச
அரியதே வுயர்ந்த அமரர்தம் பதியும்
அதற்கிணை யாகுமோ அறையின், (4)

தேவுல காளுந் தேவர்கோன் றன்பொற்
றேகத்தி னுறும்பழி தீர
மாவுல கெங்குந் திரிந்துபல் பதிகள்
வணங்கியு மகன்றிடா திந்தக்
காவளம் பொலியும் சுசிந்தையிற் பொருந்தக்
காயநற் சுசிவரப் பெற்றால்
மூவுல கத்தும் இப்பதிக் கிணையாய்
மொழியவோர் நற்பதி யுளதோ. (5)

ஆகச் செய்யுள் **(5)**

---

# சுசிந்தை மான்மிய வரலாறு.

—0—

மாதவச் சூதன் முனிவரர்க் கந்நாள்
வகுத்துரை சிவபுரா ணத்துள்
மேதகு சுசிந்தை மான்மிய மிதனை
விளங்குமுப் பதுசருக் கத்தால்
ஓதுதென் மொழியின் முத்தமிழ்க் கவிஞன்
உரைத்தவப் புராணத்தை யாய்ந்து
நீதியா யெட்டு மகிமையாய்த் தொகுத்து
நிகழ்த்தினேன் செந்தமிழ்ப் பாவால். (1)

அத்திரி முனிவன் தவம்புரி மகிமை
அவன்மனைக் கற்பினின் மாட்சி
முத்தொழி லிறைவர் காட்சியொ டான்ற
மூலலிங் கத்தினுற் பத்தி
முத்தராம் முனிவர் அருச்சனை யுடனே,
மோகமார் மேகவா கனன்மெய்ச்
சுத்தியா யிடச்செய் பூசையும் சேரர்
சோழபாண் டியர்திருப் பணியும். (2)

திருமக ளுறையும் மலைவள நாட்டிற்
சிறப்புட னுண்டிடும் அரசர்
உரிமையிற் செய்த திருப்பணிச் சிறப்பும்
ஓரெட்டு மகிமையா யுறவே
அருமறை தேடக் காணொணா விறைவன்
அரனரி அயனுரு வான
பெருமையார் சுசிந்தை மான்மிய மிதனைப்
பேசுவாம் பிரானருள் துணையால். (3)

ஆகச் செய்யுள் (3)

---

# 1. அத்திரி முனிவர் தவம்புரி மகிமை.

எழுசீர் ஆசிரியவிருத்தம்.

இத்தகு சுசிந்தை நகரமுன் னுளின்
இரும்பெரு வனங்களிற் சிறந்த
சுத்தமெய்ஞ் ஞான கானமென் றுரைக்குந்
தூயநா மத்துடன் துலங்கும்
உத்தம மாகு மிவ்வன மதனில்
உயர்திசை முகன்மக னென்னும்
அத்திரி முனிவன் மனையொடு மிருந்தே
அருந்தவம் புரிந்துறைந் தன்னே (1)

ஞானவனத்தில் அத்திரிவந்து தவம்புரியக் காரணம்.

அருந்தவ மியற்றும் முனிவரா தியர்கள்
ஐம்பொறி யடக்கிமா வேள்வி
புரிந்திடச் சிறந்த ஞானமா வனத்திற்
புகுந்தருந் தவம்புரி யெனவே
இருந்தவ மியற்றி யிமகிரி மருங்கில்
இருந்தவத் திரிக்குயர் திருமால்
பெருந்திரு வருளால் உரை செயப் போந்து
பேணிநோற் றனன்பிறப் பறுப்பான் (2)

அத்திரிமுனிவர் மகிமை.

மறையுமம் மறையின் முடிவுமம் முடிவின்
மாண்புறு பொருளுநன் குணர்ந்து
அறையுமெவ் வுலகும் யாவையும் அந்த
அரும்பொருள் மயமென அறிந்து
நிறையும்ப் பொருளே தானெனும் போத
நிலையினில் நின்றுயர் வேள்வி
முறையினன் கியற்றி யத்திரி முனிவன்
முதுவனத் தருந்தவம் முயன்றான். (3)

### அத்திரி முனிவர் மனைவியாகிய அனசூயை மகிமை.

திருவினிற் சிறந்த சீருடைப் பொலிவும்
செப்புமுன் குறிப்பறிந் தென்றும்
பருவுநற் பணிகள் அடிமையிற் புரியும்
மாண்புநற் றுயுறும் அன்பும்
பெரியவிப் புவியிற் பொறையுமின் சொல்லும்
பீடுறும் அருந்ததிக் கற்புங்
உரிமையிற் கொண்ட மனையன சூயை
யோடருந் தவம்புரிந் துறைவான். (4)

### அத்திரிமுனிவர்க்குத் திருமால் திருவரம் அருளுதல்.

அனையவம் முனிவன் தவம்புரி தலமே.
ஆச்சிரா மப்பெயர் வ்ழங்கும்
தனையரை விரும்பி யத்திரி நோற்கத்
தாமரைத் திருக்கணன் தோன்றி
முனிவ! நுங் கருத்து முற்றுற யாமோர்
மூவரும் புதல்வரா யுறுவோம்
எனவருட் புரிய முனிமன முவந்தவ்
விறையடி மலர்தொழு திருந்தான். (5)

ஆகச் செய்யுள் (5)

# 2. அனசூயை கற்பு மகிமை.



பிரமனியற்றும் வேள்வி யாரைக்கொண்டு நடத்துவதென
மாயனிடம் கேட்டல்.

மறையவ னுலகத் தவன்புரிந் திடுமோர்
மகத்தினுக் கெழுந்தனர் பெரிய
இறையவர் அரனு தியரது பொழுதின்
யெழிலயன் மாலினை நோக்கி
முறையினிவ் வேள்விச் சடங்குக ளியற்றி
முடித்திடற் குரியனை மொழியென்
றறையவம் மாயன் அத்திரிப் பெயரான்
அவனியி லுளனொரு முனிவன். (1)

மாயோன் அத்திரி முனிவரால் வேள்வி நடுத்துவாயேனல்.

அன்னவன் ஞான வனத்தினிற் றவங்கள்
ஆற்றுவான் அழைத்தது புரிவாய்
என்னமற் றயனும் மனத்துளே யெண்ண
இருந்தவ முனியுணர்ந் துடனே
உன்னினன் ஆங்கே யுற்றிட மனையா
ளொண்டவன் பிரிவினின் வருந்தக்
கன்னலின் மொழியாய் கலியல்யா மீண்டு
கடிதுறு மெனமுனி கழற. (2)

அத்திரி அயனுலகடைதல்.

கற்பினள் கணவற் றொழுதவன் கழல்கள்
கழுவிய நீர்காங் கொண்டு
அற்புட னிருப்ப முனியவண் அடைந்தான்
அம்புவி தனிலுயர் ஞானப்
பொற்புறு வனத்தம் முனிமனை கற்பின்
பொலிவினிற் றருவளம் பொலிந்து
நற்பெருங் கனிகாய் கிழங்கின பொருள்கள்
நனிமிகுந் தோங்கின சிறந்தே. (3)

அனசூயை கற்பை விளக்க மும்மூர்த்திகள்
மழை பொழியாது மறுத்தல்.

அப்பெரு முனிவன் வேள்வியின் பொருட்டாய்
அவ்வனம் நீங்கிய அந்நாள்ச்
செப்பருந் தவமா முனிமனை கற்பின்
திறமுல கறியுமா செய்ய
முப்பெருந் தலைவர் தென்றிசை மருங்கின்
முகிலினம் பொழிமழை மறுத்தார்
எப்பெருந் திசையில் நீர்வள முடைத்தென்
றேகின அவணுறு முயிர்கள். (4)

மழையின்மையா லுற்ற செயலை அனசூயை காணல்.

மழையிலா மையினல் வனத்துறை வோரும்
மாதவர் யாவரும் வருந்தத்
தழைவற மரங்கள் சாய்ந்துலர்ந் தனவத்
தயங்குறு செயலினைக் கண்டு
சழையுறு மென்றோள் உடையன சூயைக்
கற்பினள் கணவனை யுளத்தின்
விழைவுற நினைந்து அவனடி விளக்கும்
மேதகு நீர்கரத் தெடுத்தாள். (5)

அனசூயை கணவன் பாத நீரால் மழை பொழியச்செய்தல்.

தன்பதி யடிகள் பணிந்துமா முகில்கள்
தகுமழை பொழிதரு கென்ன
முன்புற மொழிந்தந் நீரைமேல் வீச
மொய்த்துயர் மேகங்கள் முழங்கி
இன்புற நன்னீர் பொழிந்தன வதனு
வீரறு யோசனை யளவாய்த்
தென்புவி செழிப்பப் பசியினல் வருந்திச்
சென்றபல் லுயிரெலாம் செறிந்த (6)

அனசூயை பசியால் வருந்தினோர்க்குணவுகொடுத்தல்.

முனிவரே முதலா யாங்குவந் துற்று
மொய்த்தவர் பசியற முன்னிக்
கனிகிழங் கினவும் அன்னமுங் கறியுங்
கலந்தகல் லுணவுக ளளித்து
மனமகிழ்ந் திருந்தா ளித்திரு மாது
மாபெரு மிறைவராம் மூவர்
நினைபெருஞ் செயலை மாற்றின ளென்னில்
நிறையினிற் பெரியதொன் றுளதோ. (7)

### மும்மூர்த்திகள் கிழத்தன்மையராய் அனசூயையிடம் வருதல்.

அடியவர் வேண்டும் பொருளெலா மருளும்
அரனரி யயனெனும் மூவர்
படியினிற் சிறந்த கற்பினா ளிடத்திற்
பகர்திரு வாடலே புரியத்
தடியுறு காமும் தளர்ந்தமென் னடையும்
சாலமூப் புடைமையுந் தயங்கும்
முடிநரைத் தனவாய் முகஞ்சுரித் திடவும்
முதுகுகூ னுற்றமெய் யுடனே. (8)

### அனசூயை தன்னிடமுற்ற தவத்தோரை அமுது செய்ய அழைத்தல்.

அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்.

பற்பலநா ளுணவின்றிப் பசிமிகுந்து நனிவருத்தும்
பான்மை யோராய்க்
கற்புடையா ளுறைசாலை மருங்கணைந்தார் அவர்நிலைமை
கண்டம் மாது
நற்பெரிய அருந்தவரா மிவரென்ன நயந்தன்பாய்
நாடிச் சென்று
பொற்புறுநல் லறுசுவையுண் டிகளமைத்துப் போந்தவர்முன்
போற்றிச் சொல்வாள். (9)

### தவத்தோர் அனசூயையிடம் கூறத்தகா மொழிகூறல்.

மாதவத்தீ ரமுதுசெய மகிழ்ந்தருள்வீ ரெனமாது
வணங்கிக் கூற
நாதரொரு மூவரும்நீ யுடுத்ததுகில் தனையகற்றின்
நாங்க ளுண்போம்
ஓதியவிவ் வாறன்றி யுணவருந்தோ மென்றுரவ்
வுரைகே ளாமுன்
நீதியிலா மொழிகேளா தொழிகெனக்கா துகள்பொத்தி
நின்றா ளன்றே. (10)

தவத்தோரை நோக்கி அனசூயை இம்மொழி கூறத்தகாதெனவும்,
அம்மூவர் பதிலும்.

அருந்தவத்தோர்க் கடுக்காத மொழிபுகன்றீ ரிதுகேட்க
விதி யோ அம்மா
விருந்தினர்நீ ருணவருந்தி நலமுடனே குதல்நுமக்கு
மேன்மை யென்றாள்
இருந்தவர்மூ வரும்யாங்க ளிசைத்தமொழி கேட்டிலையே
லீயும் உண்டி
அருந்திடுத லின்றியுயி ரிழப்போமென் றூரணங்கும்
அகத்துச் சென்றாள். (11)

அனசூயை தவத்தோராயுற்றோரைக் குழவிகளாக்குதல்.

மறைமுனிவன் தவமணியாள் மாதவத்த ராய்வந்தோர்
வழங்கும் மாற்றம்
நிறையுறுசோ தணியோவென் றகம்நினைந்து தன்கணவன்
நெடிய பாதம்
முறைகழுவும் நீர்கொடுவந் தென்னிறையென் னுள்ளிருப்பின்
மூவ ரென்னும்
இறைவரிவர் இனியசிறு ராகுகவென் றேயவர்முன்
இறைத்தாள் வீசி. (12)

தவத்தோர் மூவரும் மூன்று குழந்தைகளாய் விளங்குதல்

தன்கொழுநற் றொழுதெழுவாள் தளிர்க்கரநீர் வீசுமுனே
தவத்தோ ரென்ன
முன்குழுமி யிருந்தவொரு மூவருமுன் னுருமாறி
முதுபார் மீது
மென்குரல்விட் டழுமினிய குழவிகளா யணையாடை
விளங்கி னாரேல்
இன்குணநா ரியர்கற்பின் மிக்கதொரு பொருளுளதோ
இயம்புங் காலை. (13)

கற்புடைமாதர் சற்பின் வலியைப் புகழ்தல்.

உலகெலாம் படைத்துக் காத்தழிப் பவராய்
உயர்பெருந் தலைவராம் மூவர்
அலகிலாத் தவமாக் கற்பினு ளிடத்தே
அருந்திருச் சிறுவராய் மருவி
மலர்முகச் செவ்வாய் அரும்பிள முறுவல்
வழங்கிடக் கிடந்தன ரெனனின்
இலகிய மாதர் கற்பெனும் வலிமுன்
எவர்பெரு வலியும்நில் லாவே. (14)

அனசூயை அம் மூன்று குழந்தைகளை நீராட்டிப் பாலூட்டிப் போற்றி வளர்த்தல்.

அத்திரி முனிவன் மனையன சூயை
யளவிலாப் பெருமகிழ் வுற்று
முத்தொழிற் புரிவோர் தனையரா யடைய
முன்னைநாள் வருந்தியாம் நோற்ற
தெத்தவ மெனத்தன் மனமுவந் தந்த
எழிற்சிறார் தமையெடுத் தன்பாச்
சுத்தநீ ராட்டி யினியபா லூட்டித்
தொட்டில்விட் டாட்டினள் துலங்க. (15)

அனசூயை அக்குழந்தைகளைத் தாலாட்டுதல்.
(கோச்சக கலிப்பா)

மலையரசன் மடக்கொடியை மணந்தவனே கண்வளராய்
கலைமதியைச் சடைவைத்த கண்ணுதலே கண்வளராய்
சிலைமதனை அன்றெரித்த சேவகனே கண்வளராய்
நிலைகுலையப் புரமெரித்த நீணகையாய் கண்வளராய். (16)

செந்திருவை மணிமார்பிற் சேர்த்தவனே கண்வளராய்
பைந்துளவத் தாரணிந்த பாலகனே கண்வளராய்
சந்தமிகு கோசலையாள் தனையனே கண்வளராய்
மைந்தனென ஆயர்குலம் வந்தோனே கண்வளராய். (17)

உலகம் படைத்த வுத்தமனே கண்வளராய்
கலையுருவக் காரிகைதன் கணவனே கண்வளராய்
அலகில் மறைகள் அறைந்தவனே கண்வளராய்
மலர்மேல் உறையும் மைந்தனே கண்வளராய். (18)

எவ்வுலகும் யாவும் யினிதீன்று காத்தழித்து
அவ்வுலகில் வாழுமுயிர்க் கன்னையுடன் அப்பனுமாம்
செவ்வியொரு மூவர்க்குச் செவிலித்தாய் உண்டான
இவ்வியலை நோக்கின் இணையில் அதிசயமே. (19)

## மும்மூர்த்திகளின் தேவியர் தங்கள் தலைவர்களைத்தேடல்

அருந்ததி புகழும் கற்பினுக் கரசி
அத்திருப் பாலர்மே லன்பு
பொருந்திட நாளும் புகராறு மின்பால்
போற்றியே புகழ்ந்தினி திருப்பப்
பெருந்தவர்க் கருளும் பேரருட் பிழம்பாம்
பீடுறு மூவரைப் பிரிந்த
திருந்தெழில் தெய்வத் தேவிய ருழன்று
தேடினர் கணவரைச் சேர. (20)

## முத்தேவியரை நாரதர் சந்தித்தல்

சுரருல கடைந்து நாடினர் மூன்று
தோகையர் அவர்முனம் தோன்றி
வரமுனி யெனுநா ரதனவ ரடிகள்
வணங்கிநுந் தலைவராம் மூவர்
நரருல கதனின் ஞானமா வனத்துள்
நல்லன சூயைதன் கற்பின்
திரமறி வகையாய்க் கிழவுரு வுடனே
சென்றன ரென்றுசெப் பினனால். (21)

## முத்தேவியர் ஞானகானவன மடைதல்

உமையவள் திருமா மகள்கலை மகளும்
ஒண்புவி யுற்றுயர் வனத்திற்
கமையுறும் முனிவர் சாலையிற் றமது
கணவர்முத் தனையராய்க் கிடந்து
இமையவர் தேடும் திருவடி மலர்கள்
இனியசெவ் வாயுறச் சுவைத்து
அமைவுற விளங்கும் லீலைகண் டிரங்கி
அம்முனி பனைதவம் புகழ்ந்தார். (22)

முத்தேவியர் அனசூயை தவத்தினைப் புகழ்தல்.

நின்பெருந் தவமே தவமதற் குலகில்
　　நிகரிலை யன்றுநின் பாலெம்
அன்பரிம் மூவர் அன்னம்வேண் டினரின்
　　றன்னவர் தமையெமக் கீந்து
இன்புறச் செய்யென் றுமைமுத லோர்கள்
　　இயம்பிடக் கேட்டன சூயை
என்பெரு முனிவர் வருமள விவணீர்
　　இருந்துநோன் பியற்றுமி னென்றாள். (23)

ஞானவனத்தில் முத்தேவியர் தவமியற்றலும்
அவர்முன் நாரதர் வருதலும்

ஞானமா வனத்தி லுமைமுத லோர்கள்
　　நல்லெழிற் கன்னிய ராகி
ஆனமா தவங்க ளியற்றின ரவர்முன்
　　அருந்தவ நாரத னடைந்து
வானமா ரமுத மனையரா மிவர்தாம்
　　மாப்பரம் பொருளொடு மங்காள்
மோனமா ஞான விருப்பொடு தொழிலாய்
　　முயங்குவோ ரெனமுனி நினையா. (24)

முத்தேவியரை நாரதர் சந்தித்துத் தவம்புரியும்
காரணம் யாதெனக்கேட்டல்.

மூவுல கேத்தும் முனிவர னுங்கம்
　　மூவர்பொன் னடிகளிற் றாழ்ந்து
பூவுல கதினிவ் வனத்தருந் தவம்நீர்
　　புரிவதென் னெனவுயர் அனைமார்
மாவுல கனைத்தும் படைத்தளித் தழிக்கும்
　　மாபெருந் தலைவரைப் பிரிந்து
தேவுல கெங்குந் தேடியிங் கடைந்து
　　செயுந்தவக் காரணந் தெரித்தார். (25)

நாரதர் முத்தேவியர்க்கு மார்கழித் திருவாதிரை மாண்புரைத்தல்.

நாரத முனியம் மங்கைமார் தங்கள்
நாதர்கள் நலம்பெற நாடித்
தாரக வுருவப் பரம்பொரு ளுடனே
தங்கிய ஞானமா சத்தி
பாரது முதலா வனைத்துமுக் குணத்திற்
படைத்திடுங் காலமாய்ப் பகரும்
சீரது மிகுந்த மார்கழிச் சிறப்பைத்
தேவியர்க் குணர்த்தினன் தெளிந்தே. (26)

மன்னிய வகண்ட பூரண மான
மாப்பரம் பொருளினின் மாயை
தன்னிலே யொடுங்கு மனைத்துமாம் நிமலன்
தன்னுயர் ஞானமா சத்தி
துன்னுமுக் குணத்து மூவரா லுலகந்
தோற்றிடச் செய்தவை யியங்க
நன்னடம் புரியும் இத்தனு மதியே
நனிசிறந் ததுவென நவில்வர். (27)

ஆறிரு மதியுள் மிக்கமார் கழியின்
ஆதிரை யேயமா லன்பாற்
கூறிய ஞான சத்திவந் துதித்துக்
குணத்துறும் மூவர்க்கு மூன்று
மாறிலாத் தொழிலாம் படைத்தலா திகளை
வழங்கிய நாளினும் மகிமை
யேறிய இவ்வா திரையெனு நாளே
யீசனு ளாமென இசைப்பர். (28)

நித்தனும் நிமலன் தன்றிரு வருளை
நேருற வுதவுமா ஞானச்
சத்தியா மிந்தச் சத்தியை வணங்கச்
சாற்றுநா ளிருபதோ டேழின்
அத்தனு திரைநாட் சிறந்ததிந் நாளின்
ஆற்றிடும் நோன்பினை யறையின்
பத்தியாய் ஞான சத்திசக் கரந்தான்
பண்புற வமைத்ததைப் பணிந்தே. (29)

ஓரெழு நாட்கள் ஞானதீர்த் தத்தில்
உவந்தினி தாடிமா ஞானச்
சீரெழுஞ் சத்தி தனைநினைந் தனையாள்
திருமனு விதிமுறை செபித்து
ஏரெழு வகையாம் மலர்கொடர்ச் சித்து
இத்திரு வாதிரை நோன்பைக்
காரெழுங் குழலீர் நோற்பவர் மனத்திற்
கருதிய தடைகுவர் யென்றான். (30)

நாரதமுனிவர் கூறிய முறையாய் முத்தேவியர்
ஆதிரை நோன்பியற்றல்.

மாதவர் போற்றும் மார்கழி மாண்பும்
மருவியம் மதியினி லுற்ற
ஆதிரைச் சிறப்பும் அத்திரு நாளின்
ஆற்றிடும் நோன்புயர் சிறப்பும்
நீதியாய் நோற்கும் முறைமையும் நோற்றோர்
நெடிதுறும் பயனுநீண் முனிவன்
ஓதினன் அனைய முறையினந் நோன்பை
யுஞற்றினர் மூவரு முவந்தே. (31)

ஆகச் செய்யுள் (31)

---

# 3. மும்மூர்த்திகள் காட்சிகொடுத்த மகிமை.

———o———

பிரமனுலகில் வேள்வி முடித்துத் தேவருலகிற் சென்றிருந்த அத்திரியை நாரதர் சந்தித்து ஞானவனத்துச் செயல்கூறல்.

*அயன்புரி வேள்வி மறைமுறை முடித்தவ்*
*வத்திரி அமரர்தம் பதியிற்*
*செயும்மகம் நடத்தத் தேவர்கோன் அழைப்பச்*
*சென்றனன் அவன்முனம் சென்று*
*நயம்பெற வுரைக்கும் நாரதன் நவின்றான்*
*ஞானமா வனத்தினில் நண்ணி*
*இயம்பரும் மூவர் சிறுவராய்க் கிடந்த*
*எழிற்றிரு லீலைக ளெல்லாம்.* (1)

தேவர்கோன் வேள்விமுடித்து அத்திரிஞானவனம் அடைதல்

*மேலுறும் அமரர் கோன்மகம் முடித்து*
*வியப்புற வான்வழி விரைவின்*
*நூலுறு கேள்வி யத்திரி முனிவன்*
*நுவலுமா யோகத்தின் வழியாய்க்*
*காலுறு கதியிற் கதிரவ னென்வே*
*கவினுறு ஞானகா னத்தின்*
*பாலுறு சாலை மருங்குறக் கண்டாள்*
*பங்கய முகத்தொளிப் பாவை.* (2)

அனசூயை தன் கணவனைக்கண்டு வணங்கி வழிபடுதல்,

*பதிதிரு முன்னம் பணிந்துநன் னீரிற்*
*பாதங்கள் விளக்கியந் நீரைக்*
*கதியுறச் சிரத்திற் றாவியுள் ளன்பாற்*
*கடிமலர் இட்டருச் சித்து*
*விதிமுறை பணிந்து மூவலம் வந்து*
*மென்மலர்க் கரங்குவித் தருகே*
*துதியொடு நின்ற தனதுயி ரனைய,*
*தோகையோ டேகினன் உறையுள்.* (3)

முனிவருக்கு அவர் மனைவி மூவர் குழந்தைகளான
காரணம் மொழிதல்.

வேதமா முனிவன் சாலையுட் புகுந்து
மேதகு சிறுவரே தென்னக்
காதலி வணங்கிக் கூறுவ ளொருநாட்
கவினுறும் பெரியராய் மூன்று
மாதவ ரடைந்து கழறிய மொழியால்
வருந்தியான் அவர்சிறு ராக
நாத! நும் பாத நீரைமுன் தூவ
நற்சிறு ராயினர் நமக்கே. (4)

அத்திரி மனைவியிடம் அம்மூன்று குழந்தைகளை
முன்னுருவாகச் செய் யெனல்.

அச்சிறுர் தமையான் அன்புட னெடுத்து
அவர்க்கமு தூட்டியா தரவாய்
உச்சிமோந் துவந்து போற்றினே னென்ன
உரைத்தனள் உண்மையை யுணர்ந்து
மெச்சினன் றனது கற்பினுள் செயலை
மேலும்நன் கறிவுற வெண்ணும்
இச்சையான் நீயிச் சிறுவர்முன் னுருவம்
இயைந்திடச் செய்யென இசைத்தான். (5)

அனசூயை குழந்தைகளாகிய மூவரை மும்மூர்த்திகளாகச் செய்தல்.

என்றின வுரைத்த கணவனைத் தொழுது
எழிலுறுங் கற்பெனின் உளதேல்
இன்றுணைத் தலைவன் முதலினோர் காண
இத்திருச் சிறுவரிப் பொழுதே
பொன்றிகழ் மேனிப் பழையதம் முருவம்
பொருந்துக வென்றவர் முன்னே
தன்றிருக் கொழுநன் பாதநீர் முகந்து
தளிர்க்கையால் வீசின ளன்றே. (6)

ஆதவர் அனைய முச்சிறூர் அக்கால்
அரனரி அயனெனும் மூர்த்திச்
சோதிமுச் சுடராய் மான்மழு மதியும்
துளவொடு சங்குசக் கரமும்
வேதபுத் தகந்தண் டொடுகமண் டலமும்
விளங்குமுக் கோலமே தாங்கி
மாதவர் முனிவர் தேவரும் மகிழ்ந்து
வணங்கநற் காட்சியாய் நின்றூர். (7)

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

எப்பொருட்கும் இறைவரொரு மூவரைமுன் குழந்தைகளாய்
இலங்கச் செய்தும்
செப்பருமக் குழந்தைகளைத் திருமூர்த்தி யாகப்பின்
திகழச் செய்த
இப்பெரிய அனசூயை இருங்கற்பின் மாண்பினையார்
இசைக்க வல்லார்
முப்புவியுந் தொழுதேத்துங் கற்பினைப்போல் மிக்கதொன்று
மொழிவ தரிதே. (8)

காட்சி கொடுத்த மூவரிடம் அனசூயை வரம் விரும்பல்.

நின்றவம் மூவர் திருவடி மலர்மேல்
நீண்முனி வணங்கிமுன் னிற்பத்
துன்றுமிவ் வுலகிற் கற்பினுக் கரசி
துதிக்கவவ் விறையவர் மகிழ்ந்து
நன்றுநும் மிருவர் அன்புநம் பாலே
நண்ணுக வெனவருட் புரிந்தார்
அன்றவர் திருமுன் வரம்பெற விரும்பி
அருமுனி மனையிவை யறையும். (9)

அன்னையோ டப்பன் ஆகியெவ் வுயிர்க்கும்
ஆரருள் சுரந்தினி தளிப்பீர்
மன்னுமென் கணவன் பாலுறும் அன்பு
வளர்ந்துமே லோங்கவும் நீவிர்
பின்னுமுப் பால ராகிவந் தெம்மைப்
பெரிதுவந் தாளவும் பிரிந்த
நன்னுதல் தேவி மாரொடும் எமக்கு
நற்றிருக் காட்சிதந் திடவும். (10)

அனசூயை விரும்பிய வரங்களை மும்மூர்த்திகள் அருளல்.

ஆனவிம் மூன்று வரமெமக் கருள்வீர்
ஐயன்மீர் யெனப்பணி கறபின்
மானனை யாளை நோக்கியவ் விறைவர்
வரமிவை யருளினோம் யின்னும்
ஞானமா வனத்தும் பாலராய் நண்ணி
நாங்களெங் களைச்செயுந் தூய
மோனமாப் பூசை முறையினு லுலகம்
முழுதுமின் புறுமென மொழிந்தார். (11)

இந்தமாப் பூசை யியலெலாங் காண
இற்றைநாள் அளவுமேழ் முனிவர்
சந்தமாத் தவமிவ் வனத்தினிற் புரிவர்
தம்மொடுந் தடையிலா னந்தம்
நுந்தமக் கருள்வான் ஆதிரை நாளின்
நோற்குமுத் தேவிய ருடனே
வந்தருட் காட்சி வழங்குவோ மென்ன
மாதினுக் கருளினர் மகிழ்ந்தே. (12)

அத்திரி முனிவர் கண்மனம் கையிம் மூன்றிடங்களில் நின்றும்
மும்மூர்த்திகள் மூன்று முனிச்சிறுவராயுதித்தல்.

முந்தரனு தியர்மூவர் அத்திரிக்கண் ணிதையங்கை
மூன்றின் மேலாய்ச்
சந்திரன்தத் தாத்திரையன் துருவாசன் யென்றுபெயர்
தாங்கி வேத
மந்திரங்கள் ஒருமூன்று வடிவாய்வந் துதித்ததென
வந்து தோன்றிச்
சுந்தரநா தாந்தபரஞ் சோதிமயம் எனமுனிவர்
சொல்ல நின்றூர். (13)

அத்திரி முனிவரை மற்றை முனிவர் புகழ்தலும் நாரதர் வருதலும்

நின்றவர்மூ வருந்தாதை யென்றமுனி யோடுமவன்
நிறையார் பன்னி
என்றவுயர் அன்னையைநன் மலர்களினு லேத்தினர்கண்
டிருந்தோ ரெல்லாம்
முன்தவஞ்செய் தோர்களினிவ் விருவர்பெருந் தவத்தினைப்போல்
முதுநீர் ஞாலத்
தென்றுமிலை யெனத்துதித்தார் அத்தருணம் நாரதர்வந்
தியம்ப லுற்றூர். (14)

நாரதர் அத்திரியாதி முனிவரை நோக்கிக் கூறல்.

மன்னியுநான் மறைபகரத் திரியேநின் மனைவிசொலும்
வகையே கேட்டு
கன்னியரா மன்னையர்மூ வரும்ஞான வாவிநெடுங்
கரையிற் போந்து
துன்னியபற் பலபகலாய்த் தவம்புரிந்தா திரைவிரதம்
தொடுத்துக் கேள்வர்
அன்னியரல் லாரெனினும் அன்பு பொருந் துறநோன்பை
ஆற்றி னூரால். (15)

நாரதர் கூறிய மொழிகேட்டு முனிவரேலாம் மகிழ்தல்.

ஆதிரையாம் நன்னாளில் அன்னவரை மணம்புரிய
அயன்மா லீசன்
ஓதிமம்புள் ளரசிடபம் ஊர்ந்தவராய் உற்றிடுவர்
உவந்து காணப்
போதிருடன் யானுமவண் போகின்றே னெனமுனிவன்
புகலக் கேட்டு
மாதிரையார் அமுதுண்டோர் எனமுனிமா தவரெல்லாம்
மகிழ்ந்தா ரன்றே. (16)

அப்பொழுதே அத்திரிதன் மனைவியொடும் அருமுனிவர்
அனைவ ரோடும்
செப்பியவத் திருஞானத் தீர்த்தநெடும் கரையிற்போய்ச்
சேர்ந்தா ராங்கே
முப்பவியுந் தொழுமனைமார் மூவருங்கை மலர்குவித்து
முறையே யேத்தி
ஒப்பருமா திரைவிரதம் நோற்றிருப்ப தெல்லோரும்
உவந்து கண்டார். (17)

முத்தேவியர் ஆதிரை நோன்பியற்றிய முறை.

அம்முனி நாரதன் நன்மொழி கேட்டுயர்
ஆதிரை நோன்பினை யோரேழ் நாள்ச்
செம்மையின் ஞானவ னப்புன லாடித்
தேனுறு சண்பக மாதிய வேழ்
கொய்மலர் கொண்டுளம் மேவிய நற்பரை
கோகன கப்பதம் யேத்தினராய்
நம்மையெ லாந்தினம் ஆள்திரு வம்மையர்
நாதரை நாடிமுன் நோற்றனரே. (18)

முத்தேவியர் மும்மூர்த்திகளிடம் சேர்தல்.

ஆதிப ராபரை யாமுயர் சத்தியை
யப்பர சத்தியின் மூவுருவாம்
மாதர்கள் மார்கழி யாதிரை நோன்புயர்
மாண்புறு மன்புடன் நோற்றிடவே
சோதியு ருத்திக ழப்பெரு வான்வழித்
தோன்றரன் மாலய னாகியதம்
நாதரி டத்துமை பூமகள் நாமகள்
நான்மறை யேத்திட நண்ணினரே. (19)

மும்மூர்த்திகள் தங்கள் ஊர்திகளில் முத்தேவியரோடு
காட்சிகொடுத்தமை.

தேவரும் மாமுனி வோரொடு மேதகு
சித்தரும் யெண்டிசைச் சேவகரும்
ஏவரு மேபுகழ் தேவியர் தம்மொடும்
ஏறுபுள் ளோதிமம் யேறினராய்
மூவரும் அவ்வனம் மேவினர் அந்நிலை
மோனமு னித்தவ வத்திரிதன்
பூவரு கற்புடை மாதொடு பன்முறை
போற்றினன் மேலவர் பூங்கழலே. (20)

ஆகச் செய்யுள் (20)

---

# 4-வது சிவலிங்க உற்பத்தி மகிமை.



மும்மூர்த்திகள் திருமுன் பணிந்துநின்ற அத்திரி
முனிவருக்குத் திருவருள் புரிதல்.

அறுசீர்க் கழி நெடில் ஆசிரிய விருத்தம்.

நிறையார்தன் மனைவியொடும் நீள்வனத்து முனிவரொடும்
நெடிது போற்றி
மறையோதிப் பணிந்தமுனி யத்திரியால் மூவருள்
வழங்கி னூரவ்
விறையோர்பால் அம்முனிவன் யாமெல்லா மெந்நாளும்
இறைஞ்சி யேத்தி
முறையாகச் செய்பூசை யேற்றருள வேண்டிக்கை
முகிழ்த்து நின்றான். (1)

அத்திரி முனிவர் வேண்டும் வரத்திற்குத்திருமால் அருண்மொழிகூறல்.

வன்பொறிகள் அகத்தடக்கி ஆணவமா திக்களகற்றி
மன்னும் ஞான
இன்புருவாந் தமையென்றும் இதையத்திற் பேதமற
இறைஞ்சு வோன்றம்
முன்புறமும் பேரன்பாற் பணிய்வவன் முகம்நோக்கி
மூவர் என்னும்
என்பெருமா இறைவருளே செந்திருமால் இன்னருளால்
இசைத்தார் மன்னே. (2)

திருமால் சிவலிங்கஉற்பத்தி மகிமை உரைத்தல்.

இஞ்ஞானப் பெருவனத்தில் இந்நாளித் தலத்துமேடே
எழிலார் தூய
மெய்ஞ்ஞான வாரமுதாய் விளங்குமொரு சிவலிங்கம்
வியப்பத் தோன்றும்
உய்ஞ்ஞானத் தவமுனிவ! அப்பொழுதோர் அச்சுவத்தம்
உயர்ந்து தோன்றும்
அஞ்ஞானம் அகன்றவரே யறிவரிதன் மாண்பெல்லாம்
அறிவாய் பின்னும் (3)

அப்பெரிய சிவலிங்கத் தாதிநடு வந்தமதாய்
அருளா லோங்கும்
முப்பொருளாம் யாமூவேம் ஒருருவாய் முயங்குவமிம்
மூர்த்தி நாமம்
எப்புவியும் புகழ்முனிவா! யெழில்தாணு மாலயனென்
றிசைப்ப வென்றும்
செப்பியவத் தருவினும்யாஞ் சேர்ந்துறைவோம் இதனுண்மை
தெளியக் காண்பாய். (4)

அத்தருவின் அடியினுறும் அருண்மயமாம் இலிங்கமதற்
கதுவே மூலம்
முத்தொழிலும் முக்குணமும் மூவெழுத்தும் முப்பொருளும்
முறையே அந்தச்
சுத்தபரி பூரணமாம் சோதிலிங்கத் துடனதற்குத்
தூயமேல் பால்
நித்தபர ஞானமயச் சிவலிங்கத் தினும்பொருந்தி
நிறையு மெல்லாம். (5)

மாதவர்மகிழ மாதவன்சிவலிங்கஉற்பத்திமகிமைகளைக்கூறிமுடித்தல்.

பாலாழிப் பாம்பணையிற் பள்ளியுறும் பரனங்கே
பரந்த வுண்மை
நூலாழிக் கரைகண்டோர் நுவல்ஞானத் தடங்கரையில்
நோற்றஞ் ஞான
மாலாழி யகன்றவெழு மாதவரோ டத்திரியும்
மகிழ்ந்தா னந்த
மேலாழி யதினுட விரியாழி அமுதமென
விளம்பி னனே. (6)

முனிச்சிறுவர்மூவர் தங்களுள்ளே சின்மயானந்தம் நினைந்திருத்தல்.

என்றினவாய் மாதவனங் கியம்பியருள் இன்மொழிகேட்
டிருந்த ஞானத்
தொன்றுதவ முனிவரெலா முவந்தேத்த வினிதிருந்தார்
உயர்ந்த மூவர்
நன்றுறுமத் திரிமுனிகை நயனமனங் களினுதித்தோர்
நன்னெஞ் சுள்ளே
அன்றுதமக் குறுமூல காரணசின் மயம்நினைந்தங்
கமர்ந்தா ரன்றே. (7)

அத்திரியையும் அனசூயையையும் மற்றமுனிவர் புகழ்தல்.

பன்னியமாப் பெருந்தவங்கள் பலபுரிந்துங் காண்பரிய
பரம மூர்த்தி
மன்னியநற் றிருக்காட்சி வழங்குதற்குக் காரணமாய்
வயங்கி நின்ற
கன்னிலையார் அத்திரியை மனைவியொடும் கனிபுகழ்ந்தார்
ஞான மோனம்
துன்னியமா முனிவரெலாம் அங்கிலையத் தொல்வனத்தோர்
தோற்றம் கண்டார். (8)

பேரொலியும் பேரொளியும் கண்டமுனிவர்கள்
அஞ்சி, முனிச் சிறுவர்பாலடைதல்.

பாரினிற்பே ரொலியோடு பரந்தசுடர் ஒளிகாணப்
பயந்தோ ராகி
நேரிலுற அஞ்சினராய் நின்றவர்யா வருமங்கே
நிகரில் லாத
சீருமுறும் முனிச்சிறுவர் மூவரிடஞ் சேர்ந்துபயந்
தீர்ந்தார் மேலே
ஆரும்வியப் பறிந்திடநல் லருத்தியுடன் நோக்கிநின்றார்
அப்போ தங்ஙன். (9)

பார்மீது மேலோங்கித் தோன்றிய அரசுற்பத்தி.

காரண மான பிரணவத் தொளியே
கவினுறக் கலந்ததோற் றத்தோ
டாரண மறியா இறைவர்தங் கலைகள்
ஆர்ந்தரு மறைகளின் சாயை
பூரண மாகப் பொருந்தியோர் அரசு
பூதலத் தடியினின் றெழுந்து
தாரணி யோர்கள் கண்களுக் கரிதாய்
தாவிமே லோங்கிநின் றதுவே. (10)

## சிவ லிங்க உற்பத்தி.

அத்தகு தருவின் அருகுமேல் பாலாய்
அரனரி அயனுரு வான
நித்தமாச் சோதி மயமுநல் லருளின்
நிறைவுடன் அமுதமே வடிவாய்
சுத்தமாய் ஞானச் சிற்பர லிங்கம்
தோனறிடக் கண்டுடன் தொழுது
முத்தராம் முனிவர் தேவரும் சித்தர்
முதலினோர் துதித்தனர் மொய்த்தே. (11)

## தேவர் முனிவர் சித்தர் முதலோர் தோத்திரம்புரிதல்

$ பாலி லொன்றிய நெய் போல வெங்கு மோரு
பான்மை கொண்டிலகு மேன்மையாய்
மாலி லொன்று புல னுலியன்ற வுயிர்
மாய் விலாதுலவ வேசெய் வாய்
நூலி லொன்று பொருளேதெரிந்த மறை
நோன்மை யந்தணர்கள் நால்வரோ
டாலி லொன்று பர ஞான வின்பவுனை
யாரறிந் துரைசெய் வார்களே. (12)

$ தருவு மாயுதவு கருமாய் விரவு
தழைகள் நீடு பணை நிழல்க ளாய்
மருவு மாய் மலரு மாய் மலர்ந்த கனி
வர்க்கமா யிரச வர்க்க மாய்
உருவு மாய் உருவி லுயிருமாய் உயிருள்
உணர்வு மா யுணர்வு முணர்வுறு
தருவு மா யருவில் அருளு மாயவுனை
யாரறிந் துரைசெய் வார் களே. (13

$ பஞ்சு மாய் முறுகு நூலுமா யிறுகு
படமுமா யுடைகொ ளிடமுமாய்
நெஞ்சு மாய் நினைவு மாயமர்ந்திடு மோர்
நெறியு மாய் நெறிகொள் குறியுமாய்
நஞ்சு மாயமுது மாயுடன் பருகும்
நாத னயதிக பூத மோர்
அஞ்சு மாய் மறைகள் நாலு மாயவுனை
யாரறிந்துரை செய் வார் களே. (14)

$ சிகர மால் வரைகள் தரைகள் வாரிதிகள்
    தேவர் மானிடவர் யாவரும்
பகரு மாறுத்வு தந்தை தாயெனு மோர்
    பண்ப ஞயவுயிர் நண்பநீ
நிகரி லாதஅன ரூவைய மைந்தரென
    நின்ற வாறுபுகல் கின்றதே
தகர மாயலிபி யெனவி ராவுமுனை
    யாரறிந் துரைசெய் வார் களே. (15)

$ உரைசெய் நாதவொலி யாயெழுத்து மெழு
    துரையுமா யுரைசெய் பொருளு மாய்
பரசு பாணிமுதல் மூவரா யருள் செய்
    பவருமா யதுகொள் பவரு மர்ய்ச்
சிரசு மாபுரசு பதமுமா யினிய
    தேகமாய் நிறம னேகமாய்
அரசு மாயமிர்த லிங்க மாயவுனை
    யாரறிந் துரைசெய் வார்களே. (16)

$ நீதியா யதின்வி ரோதியாய் வெளியில்
    நிறைவு மாயிருளின் மறைவு மாய்ப்
பேதி யாதநவ பேதமாய் மருவு
    பெண்ணுமா யலியோ டாணுமாய்
சாதியா வருசமாதியா யெதிர் கொள்
    தாணு மாலயனு மானதோர்
ஆதி யாயொளி கொள் சோதி யாயவுனை
    யாரறிந் துரைசெய் வார்களே. (17)

$ என்றுரைத் தமர ரேத்தித்து மகிழ்
    வெய்த நீடுலக மெங்கணும்
துன்று மற்புதமதாக மாதவர்கள்
    தூய கின்னரர் களாதி யாய்,
அன்றுதித்த வரசைப் பின் மூவரென
    லாய்வி ளங்கு வடிவத்தை நேர்
சென்று பத்தியொடு கண்டு முத்திதரு
    சித்தி பெற்றனர்கள் சித்தமே. (18)

ஆகச் செய்யுள் **(18)**

---

$ இவ்வடையாளமுள்ள தோத்திரப் பாடல்கள்
தலபுராணத்துள்ளனவாம்.

# (5) முனிவர்கள் பூஜித்த மகிமை.



அத்தரு வரசின் தன்மையோ டான்ற
அமுதலிங் கத்தினுற் பத்தி
இத்தகை யாகு மென்பவந் நாளின்
இரும்பெரும் அன்பினு லேத்தி
மெய்த்தகு பூசை செய்துளோர் தன்மை
விமலனன் னவர்க்கருட் புரிந்த
உத்தம மகிமை தனைமுனிவரர்க்கு
உரைத்தனன் சூதமா முனிவன். (1)

முனிச்சிறுவர் மூவர் சிவலிங்கத்திற் பூஜித்தமை.

தருவினுக் கரசாந் தருவுமத் தருவிற்
றனிமுதற் பொருளெனும் மூவர்
உருவமாம் ஞான லிங்கமும் ஞான
உயர்வனத் துதித்தவந் நாளின்
பெருமுனி யான அத்திரி விழியிற்
பேதமில் லவனுளங் கரத்தில்
வருமுனி வோராம் மூவருந் தாமாய்
மன்னுலிங் கத்தருச் சித்தார். (2)

அந்தமாச் சோதி வுருவடி நடுவும்
அந்தமுஞ் சந்திர னுடனே
சந்தமாத் தத்தாத் திரையனுந் துருவா
சனுமுறை பூசனை புரிந்தார்
முந்துபன் னாளா யிருந்தருந் தவஞ்செய்
முனிவரோ ரெழுவரோ டாங்கு
வந்துகண் டோர்க்கும் முத்திதா மளிக்க
மாபெரும் அன்பொடு மகிழ்ந்தே. (3)

அன்புறு பூசை செய்பவர் செய்யும்
அப்பெரும் பூசனை கொள்வோர்
இன்புறு மாநற் பயன்றரு வோரும்
இங்கிவ ராகுமென் றேத்தி
முன்புற வானோர் குழுவொடு மோரேழ்
முனிவருங் கண்டுளங் களிப்ப
பொன்பொலி ஞான அமுதலிங் கத்திற்
பூசனை திருந்துறப் புரிந்தார். (4)

### மும்மூர்த்தியுருவாகிய சிவதாணுநாதர் முனிச்சிறுவர் முன் தோன்றி அரசினைப் பூஜிப்பீர் என்றருளுதல்.

வேறு.

சிவனரி அயனே யான திகழ்முனிச் சிறுவர் மூவர்
சிவனரி அயனும் மூவ ராந்தமைப் பூசை செய்ய
சிவனரி அயனுந் தாணு அவர்திரு முகமே நோக்கிச்
சிவனரி அயனுய்த் தோன்றும் சீரர சேத்து மென்றான். (5)

### அரசின் மாண்பு கூறுதல்.

அரும்புகழ் அரசைப்பூசி யாதுலிங் கத்தைப் பூசை
புரிவதந் தணர்கள் வேதம் புகல்கிலர் புறநூ லோதித்
திரிவதும் அன்னை தந்தை செழும்பசி யுற்றிருப்ப
வருமகன் அன்ன தானம் மறையவர்க் களிப்ப தொக்கும். (6)

அரசினைப் பூசை செய்தால் அன்னதற் கொப்ப தில்லை
அரசமே முன்ன தாகும் அணிசிவ லிங்கம் பின்னும்
அரசது தானே லிங்கம் லிங்கமே வரச தாகும்
அரசுநன் முத்தி தன்னை அளிப்பதற் காதி யென்றும். (7)

### முனிச்சிறுவர் மூவர் முன் மும்மூர்த்திகள் காட்சிகொடுத்தல்.

$ தேவர்தம் பெருமான் சொல்லச் சினையரசியர்ச் சித்தார்
மூவரப் பூசைகொண்டார் மூவரும் பின்ன ரான்ற
தாவர லிங்கத் தாதி தனினடு வினிலங் கத்தில்
மேவர மடவா ரோடு வெளிவந்து நின்றார் அன்றே. (8)

### மும்மூர்த்திகள் காட்சிகண்ட முனிச்சிறுவர் மகிழ்ச்சி.

$ கண்டர் களிகொண்டா ரிடர் காணருயர் சேனர்
விண்டா ரமுதுண்டா ரென வியந்தார் தவத்துயர்ந்தார்
எண்டாரணி கொண்டாடு மிலிங்கத்தி லியங்கும்
மண்டான் முதலுண்டா யடைவதுமங்கதி லாமால். (9)

$ முத்திக் கொரு லோகம்பெரு மூவர்க்குயர் தேகம்
சித்திக்கு மெய்ஞ்ஞானந் தவர் சேமித்த நிதானம்
பத்திக் கெது மோகம்மது பாலித்திடு மேகம்
சத்திக் கருளங்கந் திகழ் தாணுச் சிவலிங்கம். (10)

$ பூசித்தவரும் பூசனை பூண்டேற் பவரும்மாய்
நேசித்தவ ரவர்மூவர்தம் நிலைகண்டு நிலைத்துப்
பாசத்தளை தானற்றுள பசையற்றிசை யுற்றே
யோசித் தெழு மெழுமாதவ ருயிர்முத்தியி னுற்றார். (11)

$ ஒருமூவரும் முனிலோசன முள்ளங்கை யுவந்தே
தருமூவரு மானாரவர் தாதைக் குரை செய்தார்
வருமூவரை நீர்பூசனை வழிபாடு செய்வீரென்
றருமூவரும் இலிங்கத்துற லானாரன பொழுதே. (12)

$ அன்னோ ருரை கொண்டத்திரியானோ னயனுதி
முன்னோர் துரு வாசாதிய முதலோ ரவர்முதலாய்
மன்னோர் சிவ லிங்கத்துரு வானோர் தமைமுனிவன்
தன்னோ ரிதை யப்பாவனை தானோர்தல் செய்தானால்.(13)

அத்திரிமுனிவர் பூஜித்தல்.

அறுசீராசிரிய விருத்தம்.

அத்திரிமா முனியளவில் பேரன்பா லமுதமய மான தூயச்
சித்துருவாஞ் சிவலிங்கத் திணையரசைச் சிந்தித்து திருந்து பூசை
உத்தமமாய் புரிந்தனனவ் வுயிர்முனிவன் மனைவியுந்தன் உளத்தின் மூன்று
சத்தியொடு மொருமூவர் தங்களைமா னதபூசை தகையாய் செய்தாள். (14)

இன்னவர்தம் பவமகற்றி யினிதருளுங் கருணையினால்
இலங்கு மூவர்
முன்னுறமுச் சத்தியொடு வெளிவந்தே யவர்க்கீந்தார்
முத்தி யின்பம்
அன்னவர்முன் னோரேழு முனிவர்களு மடியேங்கள்
அருச்சித் தன்பாற்
பன்னுமறை முறையேசெய் பூசையினை யேற்றருளப்
பணிந்து நின்றார். (15)

அருமறைமா முனியேழ்வர் தமைநோக்கிப் பேரருளால்
அங்நா ளீசன்
வருமுறையே யிவ்வுசம்போய் அடுத்தகிரே தாயுகத்தின்
மகிழ்ந்து நீங்கள்
பெருமைதருந் திருப்பூசை யியற்றுவீ ரென்றருளப்
பிரானை யேத்திக்
கருணைசெயும் அக்காலம் அறிவதெங்ஙன் எனமுனிவர்
கழறி னாரே. (16)

பாதிமதிச் சடையுடைய பரனருள்வா ருகங்களெனப்
பகரும் நான்கில்
ஆதியுகத் தரசான தருவேடின் யுகங்களினிவ்
வவனி மீது
கோதறுநற் றுளவுங்கூ விளமுங்கொன் றையுமாகுங்
கோலங் காணும்
நீதிமுறை யருச்சிக்குங் காலமறிந் தெமைப்பூசை
நீர்செய் வீரே. (17)

தேவர்களுக் கரியபிரான் திருவருள்செய் திடுமுறைதி
ரேதா வென்னும்
மாவுகத்தில் அவ்வரசே நற்றுளவாய் மன்னிநின்ற
மாண்பை நோக்கி
மேவியவோ ரேழ்முனிவர் வியந்தனர்பே ரன்பினராய்
விரும்பிப் பூசை
தாவறுநன் முறைபுரியத் தாணுதிரு வருள்பெற்றுச்
சார்ந்தா ரன்றே. (18)

ஒருமூன்றும் யுகமதனில் அத்துளவங் கூவிள்மா
யோங்கி நிற்பப்
பெருமூன்று மாதவராம் வசிட்டனும்வி யாதனொடு
பிறங்கு கேள்வித்
திருவாம தேவனிவர் சிவலிங்கத் தொடுவில்வத்
தினும்பே ரன்பாய்
அருண்மூவர் தமையாதி நடுவந்தத் துன்னிமுறை
யருச்சித் தாரே. (19)

அத்துவித அபரோட்ச அனுபவராம் அம்மூவர்
அகத்தா னந்தச்
சித்துருவாய்த் தமையென்றுந் தெரிசிப்போர் பேரன்பாற்
சிவலிங் கத்தில்
உத்தமமாய் அருச்சிப்ப வுவந்தருளால் அவர்முன்னே
யொளிர்முக் கண்ணும்
வைத்தசடை மதியோடு வயங்குதிரு வருளுருவாய்
வந்து நின்றார். (20)

முத்தரெனு முனிவரொரு மூவரின்முன் முழுமுதலாம் முக்கண் ணூற்ற
அத்தரெழுந் தருட்காட்சி யினிதருளி யம்முனிவர்க் களவில் லாத
நித்தபர மானந்த நிரதிசயப் பெருமோன நிலையைக் காட்டிச்
சுத்தசிவ லிங்கமெனுந் திருவுருவ வடிவாகித் துன்னி னாரே. (21)

நான்கென்னும் யுகமாய விக்கலியின் உயர்வில்வம் ஞால மீதிற்
றேன்றுன்னு பூந்தளிர்ப்பொற் றிருக்கொன்றைத் தருவாகச் சிறந்தஞான
கான்றுன்னு சிவலிங்கத் துடனந்தத் தருவினையுங் கழிபே ரன்பால்
வான்றுன்னு தேவரொடு பலமுனிவர் பூசித்து வணங்கி னாரே. (22)

ஆதிசங்கராசாரியர் பூஜித்தல்.

அந்நாளிற் பின்னுலகிற் பரந்துநின்ற சார்வாகம் அருக மாதி
முன்னோர்தம் புறச்சமயம் முக்திக்கு முரணென்ன முன்வா தித்துத்
தன்னேரில் லாச்சைவ முதலாறு சமயங்கள் தரணி மீது
எந்நாளும் அழிவில்லா முத்திதருஞ் சமயமென இலகச் செய்தோன் (23)

வேதங்கள் அங்கங்கள் விரிந்தபுரா ணங்களொடு மேன்மை யென்ன
ஓதும்பல் கலைகளெலா மொருங்குணர்ந்து வுபநிடதத் துண்மை கண்டு
வாதங்கள் புரிந்துபர சமயகோ ளரியாகி மாவி யாசன்
ஓதியவே தாந்தசூத் திரங்கட்குப் பாடியம்நன் குரைத்த தூயோன். (24)

அப்பெரிய சூத்திரத்தின் அரும்பொருள்கண் டவராய
ஆன்ஷேரர் தம்மிற்
செப்பியதன் பொருளாம்வ கம்மேவாத் துவிதமிதே,
சிறந்த தென்ன
இப்புவியிற் பலபெரியோர் புகழ்தகையன் சிவஞான
மீன்ற கன்றய்
முட்பலவின் கனிமிகுந்த முதுமலைநாட் டினிலுதித்த
முனிவ ஞனேன். (25)

அறையுமிந்தப் பேருலகின் மறம்நீக்கி யறம்நிறுத்த
அருளா லீசன்
முறையினுதித் திடுவரென மொழிப்படிமா லுருவான
முனிவி யாசன்
மறையுமறை முடிவையுமுற் றெருகுத்தான்மா தவன்கீதை
வகுத்தான் பின்னத்
துறையினைப்பா டியஞ்செய்யப் பரசிவனே சங்கரனய்த்
தோன்றி ஞனே. (26)

தார்ச்சேரர் நாட்டினிற்கா லடியூரிற் சிவகுருவந்
தணர்க்கு வாய்த்த
சீர்ச்சிவதா ரகையெனுநன் மனைவியொடு செய்ததவச்
செல்வச் சேயாய்
சூர்க்கலியி ராயிரத்தின் ஐநூற்றுத் தொண்ணூற்றிற்
றெடர்ந்த மூன்றிற்
பார்க்கணுதித் துலகேத்தப் பகர்துறவின் வேந்தனெனப்
பரந்த மாண்போன். (27)

இங்குலகத் தெக்கலையும் வல்லுநரே யேறியிருந்
திடுதற் கேற்ற
துங்கமுறுங் கலைபீடத் தினிதெழுந்தான் றுரியநிலை
துன்னு மோன
சங்கரமாக் குரவனுயர் ஞானவனச் சிவதாணுத்
தம்பி ரான்முன்
அங்கமர்ந்து தனதகத்தும் புறத்தினும்பே ரன்போடும்
அருச்சித் தானல். (28)

பூரணமாய்ப் பொலிந்தகண்ட மெய்யறிவா னந்தமதாய்ப்
புந்திக் கெட்டாக்
காரணமாம் பரம்பொருளைத் துரியநிலை தனிற்கண்டோன்
கண்ணின் முன்னே
ஆரணங்காண் பருஞ்சிவனே யருளுருவாய் வெளிவந்தே
அன்னோற் கந்நாள்
சீரணவும் பெருமோன நிலையினைமுன் செப்பாமற்
செப்பி னானே. (29)

அப்பெருமான் அருட்கடலிற் புகுந்தாடி அகத்தெழுந்த
அழிவில் லாத
செப்பருமா னந்தமயத் தெள்கடலிற் றிளைத்தாடுஞ்
செல்வற் கீசன்
எப்புவியும் புகழ்ஞான கானமுறு மகிமையெலாம்
இனிதாய்க் கூறி
முப்பெருமா மூர்த்திமயச் சிவலிங்கத் திருவுருவின்
முயங்கி னானே. (30)

ஆகச் செய்யுள் (30)

---

# (6) இந்திரன் பூஜித்த மகிமை.



விண்ணவர்க் கிறைவன் காமவெந் தழிலின்
மேவினன் கோதமன் மனைபால்
நண்ணிய அன்னோன் கொடுவினைச் செயலால்
நான்மறை முனிநனி வெகுண்டு
பெண்ணியற் குறிகள் உடல்முழு தடையப்
பேசினன் சாபமஃ துறவே
எண்ணுதற் கரிய துயரனிந் திரன்போய்
யீசனைத் தொழவவ னருளால். (1)

வாசவன் றனக்கக் குறிகளாய்த் தன்னை
மற்றுளோர் நோக்கிடக் கண்ணுப்
தேசுறப் பெற்றுத் தேவர்கள் சூழத்
திருந்தவை இருந்தனன் அன்னோன்
தேசிக னுடனே யசுரர்தங் குரவன்
செப்பினன் பிறர்மனை நயந்து
மாசுறு வோர்க்குக் குரவனீ யென்ன
வகுத்துரை மொழிக்குளம் வருந்தி. (2)

பொன்னகர்க் கரசன் நாண்மிகுந் திருந்தான்
பொன்னெனுங் குருவறிந் தரசே
உன்னுடம் படைந்த அசுசியாம் பிணிதான்
உயர்திரு மூர்த்தியா மிறைவர்
மன்னிய அருளென் றொருமருந் தடையின்
மாறுவ தன்றிமற் றொழியா
தென்னமுன் னுரைத்துப் பின்னுமவ் வியல்பை
இந்திரற் கறிவுற இசைத்தான். (3)

தேவுல கத்தோர் முதற்பல ரெவரும்
தீவினை தீர்த்திடச் சேரும்
பூவுல கத்திற் றென்கடல் மருங்காய்ப்
பொதியமா மலையினுந் தெற்காய்
காவியல் ஞான கானமா மதன்பால்
கருதர னுதிய ரொருங்கே
மேவிய ஞான லிங்க மொன்றுளது
மேதகு கருணையாய் விளங்கும். (4)

இந்தமா ஞான வனத்தினி லெழுந்த
இறைவரைத் தொழுதிறைஞ் சிடிலுன்
முந்தைவல் வினையும் பழியும்போ மென்றுன்
முக்கணு னனையமூ தறிஞன்
அந்தநற் குரவன் அடிபணிந் தந்நாள்
அம்புவி யுற்றிட வெண்ணி
கொந்தலர் தருவாழ் குலிசன்விண் ணிழிந்து
கொடும்பழி யொழித்திட வெழுந்தான். (5)

புங்கவ ரேத்த இந்திரன் தேர்மேற்
பொருந்திவான் வழியதாப் புவியில்
தங்குமா ஞான வனத்திநெல் லையினிற்
சாருமுன் னந்திபோய்த் தடுத்துத்
தங்கணு யகன்பால் தேர்மிசை வருதல்
தகுமுறை யன்றெனத் தன்றேர்
அங்கவன் விடுத்தான் அத்தலந் தேரூர்
ஆமென அறைந்தன ரன்றே. (6)

நாகர்கோன் அதற்பின் நந்திதே வருளால்
நவின்ற சொன் முறையெலாம் நயந்து
மாகமார் மருத்து மலையினிற் சென்று
மாதவம் புரிந்தனன் அங்கு
தாகமாய் விரும்பிக் காணவந் தடைந்த
தனதுவெண் பரியினுற் கிரியில்
ஆகுமோர் புனித தீர்த்தமுண் டாக்கி
ஔடத தீர்த்தமென் றழைத்தான். (7)

இந்திரன் றனது நான்மருப் புடைய
யானையை நோக்கிநீ யிந்நாள்
சந்தமார் பொதிய மலையினிற் சென்றத்
தடவரை தனிலொரு நதியை
இந்தமா ஞான வனத்தினூ டினிதாய்
இலகிடச் செய்யென இசைத்தான்
தந்தியங் கவனைத் தாழ்ந்தெழுந் துயர்ந்த
தமிழ்முனி யுறைவிடம் சார. (8)

பொதியமா மலைபோய் மதமலை யெனுமாப்
பொருபெருங் கோட்டினூற் கீறி
நதிகொடு வந்து ஞானகா னத்தின்
நவில்வட மருங்கதாய் சென்று
கொதிரைக் குமரிக் கடற்புகச் செய்து
கோனடி பணிந்தது வானோர்
பதிமிக மகிழ்ந்து தனதுவெண் கரியின்
பணியினைப் புகழ்ந்துமேற் பகர்வான். (9)

பாகசா தனன்றன் பருங்கைமாக் களிற்றின்
பணையுறு கோட்டினூற் கீறி
வேகமா யோடி வந்தவிந் நதிப்பேர்
விளங்குகோட் டாறென விளம்பி
தாகமா யனைய நதிபடிந் தெழுந்து
தனதுள முருகுமெய் யன்பால்
ஏகினன் ஞான கானமா வனத்தின்
எழுந்தரு ளிறைவர்முன் னினிதே. (10)

## இந்திரன் இறைவனைப் பூஜித்தல்.

பேசுமுத் தராய னத்திற் பிறங்குதை முதலோ ராண்டாய்
மாசிலா வமுத ஞானம் வயங்குலிங் கத்தின் ஆதி
கேசுறு நடுவந் தத்துந் திகழ்திரு மூர்த்தி தம்மை
ஆசகல் அன்பால் ஏத்தி அமரர்கோன் அருச்சித் தானே. (11)

தேவர்கோன் இந்தவா றிருந்துபே ரன்பாற் பூசை
ஆவலோ டியற்றி நிற்ப ஆலமுண் டிருண்ட கண்டன்
பூவரும் அயன்மா லோடு பொருந்திநற் காட்சி யீயக்
காவுறை குலிச னுற்ற களிப்பையாம் உரைக்கற் பாற்றே. (12)

## $ இந்திரன் பெருகிவளர்ந்த பேரன்பால் மனம் உருகிநின்று இறைவனைப் போற்றல்.

சூழ்ந்தனன் சூழந்து கையாற் றொழுதனன் றொழுது தாண்மேல்
வீழ்ந்தனன் வீழ்ந்து மேனி விதிர்த்தனன் விதிர்த்தா னந்தத்
தாழ்ந்தனன் ஆழ்ந்து நேர்நின் றழுதனன் எழுபார் வாழ
வாழ்ந்தனன் இனிநா னென்ன வாழ்த்தினன் வானோர் கோமான். (13)

அண்டகோடிகளைத் தானீன் றளித்தழித் தருண்மேருக்கோ
தண்டபாணியுமா யார்க்குந் தாயுமாம் நீயே நின்னைக்
கண்டதோர் முனிவன் பன்னி கன்னுபூண் முலைப்பாலூட்ட
உண்டபா லனுமாய்த் தோன்றும் உன்னையாரறிய வல்லார். (14)

அறைதரு மறைகொள் நூலால் அளப்பதற் கரிதாய்நிற்கும்
இறையுன தடிநீ ழற்கீ ழியாவையும் அடக்கும் நீயே
நிறைசது ரங்குலத்தின் நீழலில் அடங்கி நித்தம்
உறைதரு தாணு வானல் உனையெவர் அறியவல்லார். (15)

அன்புறும் அடியர் நெஞ்சாம் அணுவகத்தடங்கும் நீயே
இன்புறும் அனந்த லோகம் எங்கணும் இருப்பக்கண்டோம்
முன்புறு பிணியுந்தீர முயல்வுறு மருந்து மேறறுத்
துன்புறு பவனுமா முன் ருெழிலெவர் அறியவல்லார். (16)

பெருமையாய்ச் சிறுமையாகிப் பெண்ணுமாய் ஆணுமாகி
கருமையாய் வெண்மையாகிக் கண்ணுமா யொளியுமாகி
அருமையாய் எளிமையாகி யகமுமாய்ப் புறமுமாகி
ஒருமையாய் பன்மையாகும் உனையெவர் அறியற்பாலார். (17)

இருவரோ டொருவனுகி இருளொடு வொளியும் போல
பொருவரும் பேதமாகிப் பொன்னேடு மணியும் போல
மருவரும் அபேதமாகி மண்ணெடு விண்ணும் போல
வுருவரு வாகிநின்ற உன்னையாரறியற் பாலார். (18)

ஐய்நின் அருள லான்மற் றசையுமோ அணுவும் நாயேன்
செய்யவல் லனசெய்தேனுன் செயலல்லாற் செயல்வே றுண்டோ
வெய்யவல் வினைதீர்த் துய்ய வேயருள் புரிநீ யென்னத்
தையலபா கனையே பாக சாதனன் துதிசெய் தானே. (19)

13 முதல் 19 வரையுள்ள 7 பாடல்கள்
தலபுராணத்தில் உள்ளனவாம்.

முப்பெருஞ் சத்தியோடு மும்முதற் பொருளு மொன்றும்
செப்பருந் தாணு அன்னேன் சிறந்தபூ சனைகண் டுள்ளம்
தப்பற நினைத்த தோர்ந்தோம் சாருமற் றெமதுமுன்னம்
கைப்பறு சுசிமுன் னெய்தில் கனிந்துனைச் சுசிசெய் வேமால். (20)

உம்பர்சோ றுற்ற வுடம்புறு பழியை
ஒழித்திடத் திருவுள முவந்து
நம்பனல் லருளால் நாட்டுவான் பின்னும்
நமதுமா நந்தியை யழைத்து
அம்புவி மேவித் தலமுறச் செய்யின்
அனைத்துல கமுமவ னுடனே
இம்பர்வந் தெய்தும் அப்பொழு திங்கே
இருஞ்சபை கூட்டுவோ மெனவே. (21)

இமையவர்க் கிறைவன் சிவபிரா னருளால்
இசைத்தருண் மொழிக்குளம் மகிழ்ந்து
உமையவள் பதிவாழ் கைலையி னணுகி
ஓங்குபல் சிவகணம் புரக்கும்
கமையுறு நந்தி கழல்பணிந் தழைப்பக்
கண்ணுதற் கடவுளைப் போற்றி
அமைவுடன் பெரிய நந்தியிந் திரனோ
டவனியி லெய்திடற் கெழுந்தான். (22)

அப்பொழு துயர்ந்த நந்திதே வுடனே
அமரரே யாதிமு வாறாய்
செப்பிடுங் கணமுந் திசைபுரப் பவரும்
சிவகணத் தவரெனச் சிறந்த
ஒப்பரு முந்நூற் றந்தணர் தாமும்
உயர்ந்தவான் வழியதாப் புவியின்
முப்புவி போற்றும் ஞானமா வனத்தின்
முதல்வன்முன் னுற்றனர் முறையே (23)

முப்பரம் பொருளுந் தாமென விளங்கும்
முதல்வன்றன் னுறைவிட மதற்கும்
அப்பெருங் கொன்றை யடியத னுக்கும்
அணியுறு நடுவனோர் சபையைச்

செப்பருந் திறத்தி னமைத்தத னுரிமை
சிறந்தவந் தணர்கள்முந் நூற்றோர்க்
கொப்படைத் ததற்கு வடதுபாற் † காளி
உறைந்திட வருளினன் உவந்தே. (24)

திருந்துமச் சபையிற் சிவபிரான் றனக்குத்
தென்புறம் மாயனும் அன்னோன்
பொருந்திட மதற்கு நடுவணாய் அயனும்
பொலிந்திட வினிதெழுந் தருளி
அருந்தவ வமரர் முதற்பல குழுவோர்
அனைவருஞ் சான்றென வாங்கே
இருந்திடத் தாணு நாதனிந் திரனை
இருஞ்சுசி செயநிணைந் தருளி. (25)

---

† இக்காளிதேவி, திருக்கைலாயத்தினின்றுவந்த சிவகணமாகிய முந்நூற்றந்தணர் குழுவோடு வந்த தேவியானமையால் முந்நூற்று நங்கையம்மன் எனத் திருநாமமுடையவராவர். இவ்வன்னை எழுந்தருளிய திருக்கோயிலில் ஒரு கல்வெட்டுளது, அது தெளிவாய் விளங்கவில்லை, ஆயினும், அதிற்காணும் சிலவிஷயங்கள் பின் வருமாறு.

கொல்லம் 817 ஆடி மாசம் 5-ம் தியதி சுசீந்திரமுடைய நயினார்கோயில் தெய்வக்கன்னி சிறப்புக்கு, முதற்குடி மாதுக்குட்டி கணக்காக அம்மன் முந்நூற்று நங்கைக்கு ஆண்டுதோறும் திருஆடிப் பூரச்சிறப்பும். திருஊஞ்சலும், திருவீதி வளயம் எழுந்தருளுகிற வகைக்கும், விட்டநிலமாவது.

அக்கல்வெட்டில் கூறும் நிலங்கள் இன்னகுளம் புரவில் இவ்வளவென்று தெளிவாய் காணவில்லை, ஆதலின் அவற்றை விடுத்தேம் பாரிசைவரில் குப்பையாண்டி என்ற பெயர் காணப்படுகிறது.

முற்கூறிய மாதுக்குட்டி தன் மூக்குநோய் தீர்வதற்கு பாரிசைவக் குப்பையாண்டி கூறியபடி, முந்நூற்று நங்கை அம்மன்கோயிலில் நோன்புற்றிருந்து அம்மன் அருளால் அந்நோய் நீங்கிச் சுகமுற்றாள். அம்மாது, தனது தீராவினைதீர்த்த தேவிக்கு அன்பாய் இத்தேவி எழுந்தருளிய கோயிலின் கீழ்பால்திசையில் ஒரு மண்டபம் செய்வித்து, அதிலுள்ள நான்கு தூண்களோடு பொருந்திய கற்சிலை பெண் உருவங்கள் நான்கினுள்ளே, ஒன்றில், தான் நோயுற்றிருந்த போது இருந்த மூக்கின் நிலைமையைக் காட்டும் உருவம் அமைத்தும், கல்வெட்டில் கூறியபடி ஆடிப் பூரச்சிறப்பு நடத்திவருவதற்கு நிலம் விட்டுக்கொடுத்தாளெனவும் சிலர் சொல்வர்.

சார்ந்தவ ரேதம் தழலுறு நெய்யிற்
றணிவுறு மலதுசற் றேனும்
தீர்ந்திடு வகையிங் கிலையிது முடிவாச்
சிந்தனை திருவுளந் தேக்கி
ஆர்ந்தபார் மகளோர் கொள்கல முதவ
அணியுறு தேனுநெய் தருகென்
றார்ந்தவெள் ளேற்றான் உரைத்தனன் துயர்நீத்
தொழித்திட விந்திரற் குவந்தே. (26)

மாதவன் காம தேனுவாய் நெய்யும்
மலரவன் அண்டமே கலமும்
தீதிலா தளிப்பத் தீயுருக் கொண்டோன்
செங்கன லுருவமாய்ச் சேர
ஓதுமிவ் வுலகின் மூவரும் யானென்
றொருமொழி விண்மிசை யொலித்துப்
பேதியா தெவர்க்கு முறத்தெரிப் பதுபோற்
பிறங்கழ லெழுந்தது வானில். (27)

அப்பொழு தீசன் றனதுமுத் திரையாம்
நந்தியை அனலெனக் காய்ந்து
வெறுப்புறு நெய்யி லிட்டுநன் னிமித்தம்
ஈதென விண்ணள வெழுந்த
துப்புறு கனலைத் தேவர்க்ண் டுள்ளந்
துளங்கிடக் கரியென நின்ற
தப்பறு முந்நூற் றந்தணர் காணச்
சாற்றின னீதுவா னிறைக்கே. (28)

இத்தலத் தோரும் விண்ணவர் மறையோர்
யாவரும் இனிதுகண் டிடவே
கத்துமா ரழல்சேர் நெய்யிடை மூழ்கிக்
கருதுநந் தியையகங் கையால்
பத்தியா யெடுத்து வெளிவரு வாயேல்
பற்றிய பவமெலா மொழிந்து
சுத்தியாய் விளங்கு வாயென வருளத்
தொல்லைவா சவன்களி துளங்கி. (29)

இறையவன் கழல்கள் பணிந்தெரி நெய்யில்
இறங்கிநந் நிலையயணி கரத்தால்
முறையினி லெடுத்து மேலெழு தோற்றம்
மொய்திரை தவழ்கட லொருசார்
நிறைமுகில் படிந்து முகந்ததை யொத்தும்
நீடிருள் நீக்குபே ரொளியாம்
மறையவர் வணங்குஞ் செழுஞ்சுடர்க் கடவுள்
வைகறை வருவதும் மானும். (30)

ஞானமா வாவி நற்புனல் படிந்த
நன்மையர் தன்மையிற் சிறந்து
வானவர் கோமான் உத்தம ணுகி
வளரருட் சபைதனை யடைந்து
கூனல்வெண் பிறைசேர் இறைவனைப் பணியக்
கோலமா லயற்கரி யவனும்
தானுறு குறியாம் நந்தியை யக்கால்
தன்னரு ளான்மறைத் தனனே. (31)

வேறு.

பரிசனவே தித்தயிலத் திடையிட்டுச் சித்தர்
பகரிரும்பைப் பசும்பொன்னாச்செய்தசெய லென்ன
துரிசறுவெள் ளேற்றினர்தஞ் செயலீதற் புதமாய்
சொற்றதொடு மனமகிழ்ந்து சொரிந்தனர்பூ மாரி
முரசினொடு துந்துமியை முழக்கினர்வா சவனை
முன்னிநெடி தாசியியம் பினர்ஞான கானப்
பிரசமுறு வனத்தினையும் சுசீந்திரநற் பெயரே
பெறுகவென ஆதரவாய்ப் பேசினர்வா னவரே. (32)

முத்தொழின்முக் குணமான மூவரும்யா வருமே
முதுகொன்றை நிழலடியின் முன்னியுலா விடவே
சித்தமிக மகிழ்வெய்தத் தம்மிறைவற் கிந்நாள்
திருந்துசுசி கொடுத்தபதிச் சிறப்பினையே செப்பிக்
கைத்தலங்கள் குவித்தமரர் காவலனை யேத்திக்
கருதுமொரு மூவரையுங் கசிந்துபணிந் தெழலும்
தொத்தலரும் பூங்கொன்றை துன்னுநிழ லுறையும்
தாணுபரன் அடியேத்தித் தொழுதிருந்தான் குலிசன். (33)

வேறு.

சசிபதிதன் அகமகிழ்ந்து தளிர்க்கொன்றை யடியிருக்குந்
தன்மை நோக்கி
பசுபதிநற் கருணையினுல் அத்தலத்தின் மகிமையெலாம்,
பகர்வா னீண்டு
நசையுறவிவ் வழிவருவோர் நன்குறைவோர் ஞானமடு
நண்ணித் தோய்வோர்
இசையுறுசு சீந்திரமென் றிசைப்போர்க்கும் இருங்கயிலை
ஈதும் நாமே. (34)

இன்றளிர்ப்பூங் கொன்றையடி யேத்திவலம் வந்தோரும்
ஏற்றம் மேவு
மன்றமரும் மூவரையும் வாழ்த்திவழி பட்டோரும்
வாதை நீங்கி
துன்றுபர சுகமேவித் தொலையாத நலம்பெற்றுச்
சோதி வானத்
தென்றுமுறைந் தென்னடியில் இனிதாக வீற்றிருப்பர்
ஈது திண்ணம். (35)

விண்ணாட்டு மங்கையராம் மேவியிவ ணுறைமாதர்
மேலாம் வானோர்
மண்ணாட்டு மானிடரே தேனுவினை ஆனினங்கள்
மானு மைந்தென்
றெண்ணாட்டு தருக்களெழின் மரமாநற் பிரணவமே
இலிங்க மாகும்
தண்ணாட்டு தளிர்க்கொன்றை தனிப்பிரமம் இதற்றொப்பாந்
தலமொன் றுண்டோ. (36)

மேலான ஞானமெனும் இத்தலத்தின் விளங்குதிரி
வேணி தன்னின்
நூலாலும் நுவலரிய மார்கழியா திரைதன்னில்
நோன்பி னுடி
பாலான இதழியினை அயன்மாலை யெனையேத்திப்
பணியும் அன்பர்
நாலாக நவில்பேறு பெறுமாறு கருணைநனி
நல்கு வேமால். (37)

இன்புறுமிஞ் ஞானவனத் தலமாண்மை இசைப்போர்பால்
இனிதாய்க் கேட்டு
அன்புறநற் பொருளீவோர் உவாநாளிற் சிவநிசியில்
ஆன்ற திங்கள்
முன்பெருகு கிழமைதனிற் பதினொன்றாந் திதியதனில்
முறையா யேத்தித்
துன்பமறத்தொழுவோர்க்கும்தொடர்பகற்றியெம்பதத்தைச்
சூழ்விப் பேமால். (38)

என்றிறைவன் வாசவற்கி தியம்புதலும் எத்தவம்யான்
இயற்றி னேனோ
இன்றெனைநீ இனிதாண்டு இத்தலத்தின் எழின்மாண்மை
இசைத்தா யின்னும்
நன்றுறுமான் மியமனைத்தும் நவில்கவெனக் கேட்டருளி
நம்பன் றானும்
ஒன்றுபெருந் தவவாம தேவனைக்கேள் மாண்பெல்லாம்
உரைப்ப னென்றான். (39)

ஈசனருள் மொழிகேட்டுத் திரிவேணி வாவிதனின்
இனிதாய் மூழ்கி
வாசவன்வே தியர்சூழ மன்னுசிவ லிங்கத்தின்
வணங்கிக் கொன்றைத்
தேசுறுநன் னிழலடுத்த தேவர்சபை யமர்ஞானச்
செல்வ னான
பேசரிய மறைவாம தேவனடி தொழுதிதனைப்
பேச லுற்றான். (40)

ஏற்றமுறும் இப்பதிமான் மியமனைத்தும் யானறிய
இசைப்பீ ரென்ன
நீற்றொளிமே னிச்சிவனை நெடிதேத்திப் புத்தகங்கை
நிலவக் கொண்டு
தேற்றமுற வன்னோர்க்குத் திருச்சுசிந்தை மாண்பெலாஞ்
சிறக்கு மாறு
சாற்றரிய தவவாம தேவனினி தெடுத்தங்காட்
சாற்றி னானே. (41)

இசைக்கருவி யெழுந்தார்ப்ப இனியமறை மிகமுழங்க
எழில்வெள் ளானை
மிசைப்பெரிய தவவாம தேவனையன் பாயிருத்தி
விரும்பி யெட்டுத்
திசைப்பரவு புகழ்ஞான கானத்தை வலங்கொண்டு
தேன் பிலிற்றும்
நசைப்பெருகு கொன்றையுறு சபைநடுவே யமரர்கோன்
நண்ணச் செய்தான். (42)

விண்ணவர்க் கதிபன் ஈசனைப் பூசை
விதிமுறை செயமனத் தெண்ணி
நண்ணிய அன்பால் தன்பெருங் குரவன்
நற்பதம் பணிந்துபின் வினவி
பண்ணிய பாவந் தொலைந்தசிந் தையனாய்
படர்புகழ் மயனையாங் கழைப்ப
கண்ணிய வினைதேர் விச்சுவ கன்மன்
கருதுமன் னனடி யடைந்தான். (43)

வந்தடி பணிந்த மயன்முகம் நோக்கி
வாசவன் என்னையா ளுடைய
பைந்தொடி பாகற் காலயம் பொன்னாற்
பாங்குற அமைத்தியென் றுரைப்ப
இந்துசேர் சடையார் கோயிலும் வடபால்
எழிலுறு வாவியுஞ் சிறந்த
நந்தன வனமிம் மூன்றுமோ ரளவாய்
நாடிமுன் வகுத்தன னயந்தே. (44)

வீதிகள் நான்கும் வியப்புற அமைத்து
விளங்கிடு மாடகூ டங்கள்
வேதியர் ஒருமூந் நூற்றுவர் தமக்கு
விரும்புமா ளிகையறந் தழையும்
தீதிலா அன்னச் சாலையும் அமைத்துத்
தேவர்கோ னகரமீ தென்னக்
கோதறப் புரியக் கண்டனன் மயற்குக்
கொடுத்தனன் அளவிலாப் பரிசே. (45)

ஆறணி சடையான் றனக்கறு பத்து
நான்குப சாரமும் அடைவாய்
வீறுறப் புரிந்து வெள்விடைக் கொடியும்
விளங்குபொற் றேர்முதல் யாவும்
மாறிலா அன்பால் மானிலங் களிப்ப
வகுத்துக்கண் ணுயிர முடையோன்
பேறருள் இலிங்கந் தன்னுளே மூன்று
பேருருக் கண்டடி பணிந்தான். (46)

பணிந்தவன் கண்டு கண்டுளி ததும்ப
பரந்துடல் புளகமேற் கொள்ள
அணிந்தன சிரமேற் கரங்குவி தரப்பே
ரானந்த மாக்கடற் குளித்தான்
கணங்களா மறையோர் அமரர்மா முனிவர்
கருதுபூ பாலருங் காணப்
பிணங்கெரி நெய்யிற் குளித்துவெவ் வினையும்
பெரும்பழி தனையுமுன் னொழித்தோன். (47)

அக்கணத் தாங்கே வந்தவ ரெவரும்
அமரர்கோன் றொழும்பரா தலினுன்
மைக்கட லெழுந்த நஞ்சருந் திறைவன்
வடிவினை வெளிப்படக் கண்டார்
திக்கெலாம் புகழ இந்திரற் கிரங்கி
சிந்தையென் னருளினுற் செவ்வி
மிக்குறப் பெற்றாய் மேலுனக் கியாது
விருப்பென வினவினன் விமலன். (48)

முண்டகத் தாளை விதிமுறை வணங்க
முன்வினை யாவையுந் தீர்த்தாய்
தொண்டனேன் இதழி தனையிலிங் கத்தை
தொழவலஞ் செய்திடச் செய்தாய்
மண்டலம் வணங்கும் வாமதே வன்பால்
மான்மிய மகிமைகேட் பித்தாய்
எண்டகு வடிவு காட்டினை யினியான்
வேண்டுவ தீண்டுரை குவதே. (49)

என்னுமன் னவனை நோக்கிநீ கேளென்
றின்னருள் புரிந்துமேல் இறைவன்
துன்னுமிச் சபைமுந் நூற்றவர் தாமும்
தூயவந் தணர்களா யென்னைப்
பன்னுமர்ச் சனைசெய் திங்கினி திருப்பப்
பைம்பொனுட் டும்பரேத் தெடுப்ப
மன்னுபோ கங்கள் நுகர்ந்தினி திருந்து
வானுல காளென அருள. (50)

தேவர்கோன் றானு நாதனு ரருளுந்
திருமொழி மறுத்திட அஞ்சி
பூவலர் செந்தா மரையடி பிரிந்து
போவதற் கரியனாய் நிற்ப
மூவர்கோ னான முக்கணன் அருள்வான்
முளரியா யிரங்கணாய் நீபோய்
தேவுல காண்டு பாதியா மத்திற்
றினமும்வந் தேத்துவா யெனவே. (51)

எம்பிரா னடியும் இன்றளிர்ப் பூத்த
இருங்கொன்றை யடியையும் இறைஞ்சி
உம்பர்கோன் அரிதிற் சென்றுதம் பதியில்
உயர்ந்தவா னவரெலா முவப்பச்
செம்பொனு டாண்டு தினமுநள் ளிரவில்
திருந்திய மனத்துநல் லன்பாய்
இம்பரிற் சுசிந்தை யாலயத் தெய்தி
இறைஞ்சிநின் றேகுவன் இனிதே. (52)

இம்முறை யந்த நாண்முதற் றினமும்
இரவரை யாமத்தின் அணுகி
மும்முறை வலம்வந் திந்திரன் பணியும்
முறையினாற் சுசிந்தையி னுறையும்
எம்மிறைக் கர்த்த யாமமாப் பூசை
இயற்றுமம் முறையிவ ணிலவாச்
செம்முறை மற்றக் காலநற் பூசை
திகழ்வதே தெரிக்குமச் சிறப்பை. (53)

ஆகச் செய்யுள் (53)

---

# (7) மூவேந்தர் பூஜித்த மகிமை.



வானுயர் பனைவேம் பாத்தியிம் மலர்கள்
வணந்ததோ ளரசரா மூவர்
தேனுறு சோலைச் சுசிந்தையி லடைந்தார்
சிறந்தவம் மன்னரிற் செழியன்
ஞானமா விலிங்கத் தரன்றனைப் பணிந்தான்
நாமவேற் சென்னியே வலப்பால்
கானமார் துளவ மாலினை யேத்திக்
கடிமலர் தூவினன் கனிந்தே. (1)

தென்கடற் கரையி னுறையுமா குமரி
திருவடி பணிந்துயர் சேரன்
அன்பொடு பூசை புரிந்தனன் உவந்து
அம்பிகை யவன்முனந் தோன்றி
மன்பெருஞ் சேர! வேண்டுவ துரைப்பாய்
வரமுனக் கருளுவ மென்ன
என்பெரும் இறைவி யுனைத்தெரி சித்தேன்
இனிப்பெறு பேறுமொன் றுளதோ. (2)

பூவுல கத்தில் எனதுநா டெங்கும்
புகழ்பெரு வளமிகுந் தோங்கி
தேவுல கென்னச் சிறந்தவாழ் வுற்றுச்
சிறந்திடச் செய்தடி யேற்கு
மூவுல கேத்தும் அன்னையே! வுனது
முளரியந் திருவடிப் பேறும்
மேவிட அருள்வாய் என்னவேண் டினனம்
விமலையன் னவற்கருள் புரிவாள். (3)

மலைவளம் மிகுந்த சேரனே! முன்னம்
வாணனைத் தடிந்திவ ணிருந்தேன்
பலர்புகழ் கொல்லா புரியினிற் சென்று
படர்முசா சுரன்றனை வென்று
நிலவுமங் கெடிய நகருறைந் துனது
நீளற நாட்டினின் மேவி
இலகுநன் னாமம் பகவதி யென்ன
இனிதுமன் னுவன்வளஞ் சிறக்க. (4)

$ ஆயி லடக்குரு வாயுவா லயமதற்
கானதென் பாலா கப்
பாய் கடற்கரை யன்னதி லெட்டெனும்
பயிரவி யாய்ச்சேர் வேம்
ஏய நற்பதி தென்றிசைக் காஞ்சியங்
கிருக்குமெம் மிறை யோனே
நீய கத்துற நினைத்துவந் திறைஞ்சுதி
நினைத்தயா வையு மெய்தும். (5)

$ என்று கன்னிகை யகன்றனள் சேரனும்
இயற்சுசீந் திரத் துற்றான்
ஒன்று தென்னவன் பூதநாதனைப் பணிந்
துவந்தருச் சித்தே பின்
துன்று மப்பதி யடைந்தனன் சோழனுந்
துளவணி மது சூதன்
நன்ற தாமடி யிறைஞ்சினன் பின்னரும்
நாடிமூ வருங் கூடி. (6)

$ மூன்று ரூபமாம் மூலலிங்கத் தினின்
மூன்றுதா னமு முன்னா
முன்று வேந்தராஞ் சேரனு தியர்மனம்
மொழி யுடல் மூன்றொன்ற
மூன்று காலமும் பூசனை செயவொரு
மூன்று லோசனன் றோன்றி
மூன்று மொன்றுமாம் பெருவர மளித்தனன்
மூன்று லோகமும் போற்ற. (7)

$ சேர சோழபா ண்டியரெனு மூவருந்
திருவருள் பெற்றே யுட்
கூரன் போடுமே லேகினர் பின்னிவர்
கோதறு வழிவந் தோர்
பாரி னற்புகழ் பெற்றுயர் சுசிந்தையிற்
பலதிருப் பணி யாற்றிச்
சீரி னுற்சிறந் தோங்கின ரப்பணி
செப்புதற் கெளி தேயோ. (8)

---

$ இந்நான்கு பாடல்கள் தலபுராணத்துள்ளன.

## மூவேந்தர் வழிவந்தோர் இயற்றிய திருப்பணி.

அருந்தவ முறுமூ வேந்தர்தம் வழியோர்
அணிசுசிந் தேசனைப் பிரியா
திருந்தவத் திருமா லெழிற்றனி யுருவம்
இசைவுறக் காணுமா றெண்ணிப்
பொருந்துமும் மூர்த்தி யுருவனுந் தாணுப்
புண்ணிய னுறையுமா லயத்திற்
திருந்துதெற் கிடத்தே திகழவோர் கோயில்
செவ்விதின் இயற்றினர் தெளிந்தே. (9)

பெருமலை நாட்டுச் சேரனு தியரப்
பிராற்குயர் பூசனை யியற்றிக்
கருமுகி லனையா னுமந்தென் றிருவேங்
கடப்பெருமா னென வழங்கி
ஒருமலை குடையா யெடுத்துக்கோப் புரந்தோன்
ஊர்ந்திடுங் கருடனைப் புரங்கள்
பொருமலை வில்லோ னூர்தியின் றென்பால்
பொற்புடை னமைந்தனர் போற்றி. (10)

தேவருக் கிறைமுற் பணியுமா லயத்திற்
செழுந்தமிழ் நாட்டினை யாண்ட
மூவர்தம் வழியோர் திருப்பணி பலவும்
முறைமையி னியற்றினர் அவையின்
மாவளச் சேரச் செண்பக ராமன்
மாப்பெரு மண்டபப் பணியாம்
பாவுறும் புகழ்சேர் வீரபாண் டியன்முற்
பகர்மணி மண்டபப் பணியே. (11)

## திருப்பாப் பூர்மூத்த திருவடிகளாகிய வீரராமவர்மர் இயற்றிய திருப்பணி.

அவ்விரண்டு சீரரச ரியற்றியமண் டபங்கள்
அவர்பெயரால் விளங்கும்பின் னனையமண் டபத்தைச்
செவ்வியுறும் பெரும்பணியாய்த் திருப்பாப்பூர் மூத்த
திருவடியாய்த் திகழ்வீர ராமவர்ம னென்னும்
இவ்வுலகம் புகழ்மன்ன னியற்றினனிக் கொல்லத்
திருமூன்று நூற்றைம்பா னீரிரண்டா மாண்டிற்
கவ்வுதுலை மாமதியிற் சோமனுட் காலைக்
கன்னியிலக் கனமென்னக் கழறிடுவ ரன்றே. (12)

## வேணாட்டடிகளாகிய மார்த்தாண்ட மன்னர் இயற்றிய திருப்பணி.

பொற்புயுநற் பொன்னிவள நாட்டுறையுஞ் சோழன்
புரிந்தபணி திருநந்தா விளக்கென்னப் புகல்வர்
முற்புகழ்சே ரலர்வழியின் முன்னுதித் தோனுகி
முதுபதியாம் வேணாட்டின் முறைபுரிந்து வந்த
நற்புகழ்சேர் மார்த்தாண்ட வர்ம்மனெனு மன்னன்
நவில்கொல்ல மைந்நூற்றி யெண்பானே டைந்தில்
அற்புதமார் அலங்கார மண்டபமொன் றமைத்தான்
அதன்பெருமை யாரொருவர் அளந்திடுவர் அம்மா. (13)

## விஜயநகர் மன்னன் இயற்றிய திருப்பணி.

விசயநகர் தனையாண்ட இராமரா சன்றன்
வீரமுய ரமைச்சனெனும் விட்டலாமா ராயன்
திசையெலாம் புகழத்தென் றிசையைநனி வென்று
செயத்தம்ப மெனப்பழைய திருக்கோபு ரத்தை
நசையுடனே சுசிந்தையினி லெழுநூற்றின் மூவேழ்
நவிலாண்டி லியற்றித்தன் னுடற்ருன் அந்த
இசையுடையோன் படைத்தலைவ னய்வந்த ஆற்றல்
ஏய்ந்ததிரு மலைநாய்க்கன் இரும்படையொன் றமைத்து. (14)

## திருமலைநாயக்கன் இயற்றிய திருப்பணி.

தன்பெரிய படையுடனே மதியும்நல் விதியும்
சார்ந்திடவோ ரரசனுய்ச் சாற்றியவந் நாய்க்கன்
முன்பெரிய மதுரையெனு முதுநாட்டை யாண்டு
முக்கணுறு சொக்கரடி முறையேத்தி நின்று
வன்பெரிய நாய்க்கர்தம் மாப்படையாற் பொருது
மாநாடு பலசேர்த்து வளநாஞ்சில் நாட்டின்
மன்பெரிய சுசிந்தையெனும் மாப்பதியி னுற்று
மகிழ்ந்தினிது தானுறைய மாளிகையொன் றமைத்தான். (15)

அந்தமா நாய்க்க னேவலா லமைத்த
அணியுறு மாளிகை யதனிற்
சொந்தமாத் தமரோ டுறையும்நா ளிறைவன்
றுறக்கமா வாயிலைத் திறக்கும்
முந்துமாத் தனுவே காதசி வரத்தன்
முதல்வனும் அழகனை நினைந்து
இந்தமாச் சுசிந்தை யாலயத் தெழுந்த
வெம்பிரா னிணையடி தொழுந்தான். (16)

வாரண மாதி மூலமென் றழைப்ப
வந்துமுன் னுண்டருள் புரிந்த
நாரணன் சுசிந்தைத் தெற்கிடத் தெழுந்த
நாதனுக் கன்பொடிந் நாய்க்கன்
தாரணி புகழும் நவமணி சூழத்
தங்கிய கவத்துவ மணிபோற்
சீரணி பதைக்கம் அகலமேற் பொலியச்
செய்தனன் திருப்பணி சிறந்தே. (17)

மூவேந்தராதியர் திருப்பணி இயற்றியதற் கறிகுறி.

போற்றுமிவ் வேந்தர் பலருமுற் பணிந்து
புண்ணியத் திருப்பணி புரிந்து
சாற்றுமிந் நஞ்சை நாட்டையு மந்நாள்
தனித்தனி புரந்தமைக் கேற்ற
தேற்றமார் சான்றுச் சுசிந்தையா லயத்திற்
செப்புமன் னவர்சிலை யுருவந்
தோற்றுமீ தன்றிச் சிலையெழுத் தனந்தந்
துன்னியிவ் வாலயத் துளவே. (18)

மூவேந்தராதியர் இயற்றிய திருப்பணிகளில் சேரமன்னர்
திருப்பணியே சிறந்ததென்பது.

தண்டமிழ் நாட்டு மன்னரா தியர்கள்
தண்பணை நன்செய்நன் னாட்டைப்
பண்டைநா ளாண்டு பல்பணி புரிந்த
பண்பினும் பன்முறை சிறப்புக்
கொண்டமா வளங்கள் பொலியவிந் நாட்டுக்
குடிதழீஇக் குணமுட னண்ட
திண்டிறற் சேரர் சுசிந்தையா லயத்தில்
திருப்பணி பலவுமாற் றினரே. (19)

ஆகச் செய்யுள் (19)

---

# (8) மலைநாட்டு மன்னர் திருப்பணி மகிமை.

மூலம் திருநாள் மன்னர் இயற்றிய திருப்பணி

சிறந்தமாச் சேர மன்னர்செம் மரபிற்
றிகழ்ந்திடு மூலநன் னாளிற்
பிறந்தமா மன்னர் தூலலிங் கமதாய்
பேசுபொற் கொடிமரத் தோடு
நிறந்திகழ் வானி னுயர்ந்தெழு நிலையாய்
நீண்டமாக் கோபுரப் பணியும்
அறந்திகழ் செங்கோ லாட்சியிற் புதிதாய்
அணியுற வியற்றின் றன்றே. (1)

அணியுறும் அனைய கோபுரப் பணியை
ஆயிரத் தன்பதோ டாறில்
நணியமா * குடமைய் யைந்தினி லெடுத்த
நலமிகு விசாகமன் வழியாய்
மணிமுடி தரித்துக் கோமுறை புரிந்த
வள்ளலாம் மூலமன் னந்தப்
பணிமுடித் தருளான் டாயிரத் தறுபான்
பண்புறு மூன்றெனப் பகர்வர். (2)

சேது இலட்சுமிபாய்
அரசியார் இயற்றிய திருப்பணி.

மன்னுயிர் தம்மைத் தன்னுயி ரெனவே
மாபெருங் கருணையாற் புரந்து
பொன்னுல காளப் புகுந்தவம் மூலப்
பூபதிப் பின்னவ ளென்னும்
பொன்னெழிற் பொலியுஞ் சேதுலட்சுமித் தாய்
புரந்தினி தாளுநாட் சுசிந்தை
மன்னிய தாணு மாலயற் கங்கி
வண்பொனின் இயற்றிட மதித்தார். (3)

* குடமைய் யைந்தினில்— மாசி (25-ல்.)

ஆலமார் கண்டன் அடியிணை போற்றும்
அகமுநற் சேவகத் திறமுஞ்
சீலமுஞ் சிறந்த வரசியார் தமது
தேவத்தா னத்துறை யமர்ந்த
நீலகண் டையர் தம்மிடம் பணிப்ப
நீள்பணி யேற்றவத் தலைவர்
காலமா யிரத்து நூற்றியா றதனிற்
கவினுற அமைத்தனர் கவசம். (4)

சித்திரைத்திருநாள் மன்னர் இயற்றிய திருப்பணி.

பொற்புயர் சுசிந்தை யிறைவருக் கன்பாற்
பொருந்திய திருப்பணி புரிந்த
கற்புயர் புனித அரசியார் தம்பிற்
காரிகை யினிதுறப் பயந்த
விற்பெரு வீரக் கோமகற் குவந்து
மிகுமொளி மணிமுடி யளிப்ப
நற்பெரும் புகழார் சித்திரைத் திருநாள்
நரபதி புரக்குமிந் நாளின். (5)

மாயிரும் பொழில்சூழ் சுசிந்தையிற் றாணு
மாலயன் மலர்த்திரு வடிக்கன்
பாயிரும் புகழார் சித்திரைச் செல்வர்
பகர்சிவா கமவிதி முறையாத்
* தூயிரு நான்கு பந்தனப் பணியைத்
தொன்மறைப் பெரியராற் சிறப்ப
ஆயிரத் தொருநூற் றெட்டினற் றலையில்
அணிமதி நாளினி லமைத்தார். (6)

---

* தூயிருநான்கு பந்தனப்பணி—தூய்—பரிசுத்தமுடைய அட்டபந்தனத் திருப்பணியாம். அட்டபந்தனம் என்பது 1 கருங்குங்கிலியம் 2 வெள்ளைக்குங்கிலியம் 3 சுக்காங்கல் 4 தேன்மெழுகு 5 (செம்பஞ்சு) மைச்சாட்சி 6 கொம்பரக்கு 7 காவிக்கல் 8 வெண்ணை இவ்வெட்டுப் பொருள்களை இடைப்படி சேர்த்து முறைப்படியரைத்துச் செய்வதெனச் சொல்லப்படுகிறது.

ஆரண முழக்குந் தமிழ்மறை யொலியும்
அலைகடல் ஒலியென ஆர்ப்பப்
பூரண கும்ப வேள்வியின் முறையும்
போசன தானமும் பொலிய
காரணன் சுசிந்தைக் கண்ணுதற் கடவுள்
கருணையாம் மழைபொழிந் திந்தத்
தாரணி தழைப்பச் சமைத்தவிப் பணியின்
தகைமையார் சாற்றிட வல்லார். (7)

இப்பெரும் பணியிவ் வாலயத் தினிதா
யேழுநா ளளவும்நன் கியற்றி
முப்பரம் பொருளு மொருபெரும் பொருளாம்
முழுமுதல் முக்கணு யகற்கு
அப்பெருந் தேவர் அதிபனும் வியப்ப
அருச்சக ராற்றிருப் பூசை
செப்பருந் திறனாய் மறைமுறை திகழச்
செய்தனர் சித்திரைச் செம்மல். (8)

பத்தியார் நமது மன்னர்தம் பணியாற்
பகர்ந்தவித் திருப்பணி முழுதும்
உத்தமத் தேவர் ஆலயத் துறையின்
உறைமகா தேவராந் தலைவர்
இத்தரை மாந்தர் கண்டுளங் களிப்ப
இனிதிருந் தாற்றின ரிதற்கு
வைத்தமாச் செம்பொன் மூவிரா யிரமும்
வழங்கினர் முறையதாய் மாதோ. (9)

திருவுறை கோயிற் றெற்கிடத் தெழுந்த
தேவனற் றிருப்பணிக் கன்பின்
மருவுறு மனத்து நமதுயர் மன்னர்
மாண்புறு கருடவா கனமும்
அருளுறு மணங்கெண் ணுன்கறம் வளர்த்த
அன்னைதன் கமலவா கனமும்
பெருவள முறவெண் பொன்னினிற் புதிதாய்
பேணிநன் கியற்றிடப் பணித்தார். (10)

இத்திருப் பணியிச் சுசிந்தையா லயத்தில்
எம்பிராற் கினிதியற் றிடயாம்
எத்தவம் புரிந்தோ மெனமனம் மகிழ்ந்து
இறைவனற் கருணையை யுன்னி
அத்திருத் தலைவ ரென்னுமா தேவ
வையரா யிரத்துநூற் றெட்டில்
சித்திரை மதியில் நிகழ்விழா அதனிற்
சிறப்புட னியற்றினர் தெளிந்தே. (11)

இம்மலைநாட்டு மன்னர்களாற் சுசிந்தை ஆலயம்
சிறந்து விளங்குகின்ற தேனல்.

இப்புவி புரக்கும் வேந்தர்கள் புகழும்
எழில்வஞ்சி மன்னரா லியற்றும்
செப்புமார் கழிமாத் திருவிழாச் சிறப்பைத்
தேவர்தாம் புகழ்வது பெரிதோ
முப்பெரு முலகத் தரிதிது வெனவே
மொழிவனு யிரக்கணு னென்னின்
ஒப்பிலாச் சுசிந்தைப் பதியிலிம் மன்னர்
உயர்திருப் பணியையா ருரைப்பர். (12)

நற்றிருச் சுசிந்தைக் கோயிலி னிகழும்
நவத்திரு முருகினி லிறைவன்
பொற்றிருத் தேரின் இனிதெழுந் தருளப்
பொற்புயர் வீதியின் வலமாய்
உற்றவப் பெரிய இரதமுன் னிலையின்
உற்றபின் றிருவமு தருந்தும்
பெற்றிய ரெனவே புகழுமிவ் வுலகம்
பெருமலை நாட்டுமன் னரையே. (13)

இன்றமிழ் நாட்டு வேந்தர்மூ வரினும்
இப்பெருஞ் சேரர்தம் வழியோர்
நன்றுற வஞ்சி நாட்டினை யாண்டு
நம்பிரா னுலய மனைத்தும்
பொன்றிகழ்ந் தோங்கப் பொதுமையாய் புரந்தும்
புகழ்த்திரு வனந்தையுஞ் சுசிந்தை
என்றின பதிகள் சிறப்பினுஞ் சிறப்பா
மெனுமுறை ஆளுவ ரினிதே. (14)

மலைவள மிகுந்த வஞ்சிமா நாட்டின்
மன்னர்தம் மந்திரி யென்னுங்
கலையறி நிபுணர்க கருள்திரு வெழுத்திற்
கவினுறு சுசீந்திர மாதி
நிலவுமா லயங்கள் நன்முறை புரிந்து
நிறைபணி யாற்றமுன் னிகழ்த்துந்
தலமெனிற் சிறந்த வித்தல் மாண்பைச்
சாற்றுவோர் யாவரே தரைமேல். (15)

சுசிந்தை ஆலயத்தில்
மாக்காளை வந்த காரணம்.

1. முன்னமிங் திரன்றே ரிப்புவி நிறுத்தி
முறைதெரி வித்தவங் நந்தி
தன்னையெம் பெருமா னுவந்துநீ யெமது
தனிக்கொடி மரத்தெதிர் தங்கி
துன்னுமிவ் வுலகத் தடியவர் முறையாத்
தொழவிடை கொடுவென வருள
மன்னுமா நந்தி தேவனங் நாளின்
மகிழ்ந்துமாக் காளையா கினனே. (16)

(மாக் காளையைப் பரமதவரசன்)
பரிசோதித்தமை.

2. இந்தமாக் காளை யுற்றிடுங் கோயில்
எழிலெலாங் கண்டிடப் பண்டு
வந்தமா வேந்தாம் பரசம யத்தோன்
மருவுமிக் காளையே தென்ன
முந்துமா தேவ னூர்தியென் றடியார்
மொழிந்திட முறுவலித் திடபம்
சொந்தமா வுணவு தானருந் திடுங்கொல்
சொல்லுமி னென்றலும் வருந்தி. (17)

3. அன்னவன் மாற்றம் அடியவர் கேட்டங்
கரனடி தொழுதிட வானில்
இன்னமாக் காளை யின்றொரு லீலை
இயற்றுமென் றருண்மொழி பெற்று
மன்னநீ வுரைத்த வகையறி யென்றார்
மற்றவ னிட்டவை தின்று
நன்னறு நீரரு மருந்தியக் காளை
நவிலும்நீர்க் கோமியம் நல்க. (18

4. தரைமிசை வாழ்வோர் இவ்வியப் பறிந்து
தாணுதன் னருளினைப் போற்றக்
கரையிலா வின்பத் தடியவர் களிப்பக்
கண்டவப் பரமத வரசன்
உரைசெயற் கரிய அதிசய முற்று
உவந்துநின் றேத்தியே கினனல்
புரையறு சுசிந்தைப் பதியினிப் புதுமை
பூதலத் தோரெலாம் புகல்வர். (19)

சுசிந்தை ஆலயத்தில் கைமுக்கு மாண்பு.

1. சதமகன் சாயச் சுசியடைந் தமையாற்
றவமிகு ஞானமா வனத்தைத்
துதிசுசீந் திரமென் றுரைப்பரிப் பதியிற்
றுன்னியிக் கேரளப் பார்ப்பார்
விதிமுறை புரிவா ரிவர்மறை விலக்கும்
வினையின ரிவரெனுந் தகைசால்
விதமறிந் திடவெவ் வெரியினி விட்ட
விடையினைக் கைமுக்கி யெடுப்பர். (20)

2. வெவ்வெரி நெய்யின் விடையெடுப் பதன்முன்
வெந்துபுண் பட்டன சிலர்கை
அவ்வெரி வெப்ப மொருசிறி தேனும்
அடைந்திடா தொளிர்ந்தன சிலர்கை
கவ்வையாய் நவநீ தத்தினுண் முக்கிக்
கறுத்ததை யுற்றவன் கரமே
இவ்வகை யுற்ற குறிகள்பற் பலவும்
இத்திரு வாலயத் துளவே. (21)

3. பாகசா தனன்மாப் பழியினை யொழித்துப்
பகர்சுசி யருளிய சுசிந்தை
ஏகநா யகன்முன் னிவ்வுல கத்தோர்
இரும்பழி யம்முறை யகற்ற
வேகமா ரெரிதோய் நெய்யினி லுற்ற
விடையினைக் கைமுக்கி யெடுத்தல்
ஆகுமிவ் வழக்கம் மாதவ ராய
அமைச்சரால் மாற்றிய தாமே. (22)

## சுசிந்தை ஆலயத் தீர்த்தமகிமை.

1. இவ்வுல கத்தி லிலகுமா லயங்கள்
எவற்றினு மீசனுக் காட்டுங்
கவ்வியத் தீர்த்தம் ஆலயத் திடப்பாற்
கவின்றிருத் தூம்பின்வா யொழுகும்
நவ்வியார் கரத்துச் சுசிந்தையெம் மிறைவன்
நாளுமா டியபெருந் தீர்த்தம்
அவ்வியல் வழியாய் வெளியுறு திருக்கும்
அன்னமாண் பெதுவெனி லறைவாம். (23)

2. தென்றிசை விளங்குங் கைலயா மென்னச்
சிறந்தவா லயத்திறை தினமும்
நன்றுற ஆடும் பால்தயி ரிளநீர்
நற்றிரு மஞ்சனம் முதலாய்
என்றின தீர்த்தம் பாதல வழிபோய்
இத்திருச் சுசிந்தையின் வடபாற்
சென்றுமா ஞானத் தடத்தினுங் குமரித்
தென்கட லதனினுஞ் சேரும். (24)

எண்ணிலாப் புகழும் இணையிலா எழிலும்
ஏய்ந்தவிச் சுசிந்தையா லயத்தின்
நண்ணுமாப் பெரிய மாண்பெலாம் விரித்து
நவிலுதற் கரியதே யெனினும்
வெண்ணிலாச் சடையோன் அருளினாற் சிறிது
விளக்கினேம் இனித்தனு மதியின்
புண்ணிய மாண்போ டாதிரை மாண்பும்
பொருந்திய பிரபந்தம் புகல்வாம். (25)

ஆகச் செய்யுள் **(25)**

சுசிந்தை மான்மியம் முற்றுப்பெற்றது.



அத்திரிமுனிவர் அவர்மனைவி, என்னும் இவ்விருவர் மகிமையினை விளக்கும் ஒரு சிறிய ஆராய்ச்சி.

## (1) அத்திரி முனிவர்.

சுசிந்தை ஆலயந்தோன்றுவதற்கு மூலகாரண முனிவராகிய அத்திரி, வேதவேதாந்த மாதி அரும்பெரு நூற்களெல்லாம் கரைகண்டு, பக்தி வைராக்கிய ஞானச்சித்தமுடைய தவயோக ஞானநெறிச் செல்வராய், இல்லறத்திருந்து தாமரையிலைத் தண்ணீர்போலச் சகத்துடன் ஒட்டியும் ஒட்டாது வாழ்ந்த மாபெரு முனிவராவர். மனைவியுடன் வனத்திருந்து தவம்புரியும் வானப்பிரஸ்தாசிரம முடையவரென இம்முனிவரைக் கூறவேண்டும், இவர் இல்லறத்தோர்குரிய விருந்தோம்பலாதி அறங்கள் புரிந்து வந்தமையினால், திருமால் இவரை நோக்கி "இன்ன நீர் இல்லறத்திருந்து வாழ்ந்துபின், பின்னமில் பரகதி பெறுகுவீரெனக்" கூறியருளினமையும், மும்மூர்த்திகள், "நும்போல்-மாட்சி இல்லறத்திருந்துமா தவஞ் செய்யும் மாதவரிலையென்றும்" எனத் திருவாய்மலர்ந்தருளினமையும். தலபுராணத்தில் அத்திரி தவம்புரி மகிமையிலும், காட்சிகொடுத்த சருக்கத்திலும் கூறப்படுவதால் இல்லறத்திருந்து மாதவம் புரிந்தவரேயாவர் அத்திரிமுனிவர்.

"கடந்த ஞானியுங் கடப்பரோ மக்கள்மேற் காதல்"

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை—அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற"

"பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனு முடையரோ—இன்னடிசிற்
புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர்"

எனக்கூறப்பெற்ற ஆன்றோர் மொழிக்கேற்ப இல்லறத்தோர்க்கின்றியமையாத நற்புத்திரப்பேறடைய அம்முனிவர் விரும்பித் திருமாலைநோக்கிப் பெருந்தவம் புரிந்தார். அப்பெருமான்

முனிவரைநோக்கி, ஞானகான வனத்திற் சென்று தவம் இயற்றுவீராக, அங்குமும் மூர்த்திகளாகிய யாம் மூவரும் சந்திரன், தத்தாத்திரையன், துர்வாசன் என மூன்று புதல்வர்களாய் வருவேமென்றருளினர். அவ்வாறே இறைவர் மூவரும், அத்திரிமுனிவரின் கண், மனம், கரம் இவற்றினின்று அம் மூன்று புதல்வர்களாயுதித்து முனிவரை அகமகிழச் செய்தனர். அப்பெறற்கரும் புண்ணியப் புதல்வர்களால் இம் முனிவர் தம்முள்ளே பேதமற இறைவனைத் தரிசித்தவழி, வெளியிலும் மும்மூர்த்தியுருவச் சிவலிங்கப் பெருமானைத் தரிசித்துப்பூஜித்து அழிவிலாப் பேரானந்தப்பெறலடைந்து இகத்திற் பரமுத்தி பெற்றுய்ந்தனர். இம்முனிவரும் இவர்மனைவியும் போல, முப்பரம்பொருளைத் தமக்குப் புதல்வர்களாய்ப்பெற்றுப் பெறற்கரும் பேறடைந்தோரை உலகிற்காண்பது மிகவும் அரிதே.

மூவுலகேத்தும் இம்முனிவர் மும்மூர்த்திகளைத் தமக்குக் குழந்தைகளாய் பெற்ற மகிமையன்றி, மும்மூர்த்திகளிலொரு மூர்த்தியாகிய பிரமன் 'தேவர்க்கிறையாகிய இந்திரன் இன்னோர் இயற்றும் பெருவேள்வி முடித்தற்பொருட்டு தம்மையழைப்ப, அவ்விண்ணுலகுக்கேகி மீண்டனரென அனசூயை கற்புமகிமையிற் கூறப்படுவதால் அத்திரி முனிவரது அரும் பெருந் தவயோக ஆற்றலின் மகிமையை யாவரே புகலவல்லார்?

## (2) அத்திரிமுனிவர் பத்தினி அனசூயை.



இம்மாதரசியார் உத்தம நற்குண நற்செய்கையுடையவராய், தம் கணவர் சொற்றவறாது இற்பணிபுரிந்து, பதிசதியெனுமிருவர் கருத்தொக்க வாழும் திருந்திய வாழ்க்கைத் துணைவியாயமைந்தவராவர். இவர் பிறதெய்வம் பேணாது, கணவனையே தெய்வமாய்த் தொழுதெழும் சீரிய குணநலம் வாய்ந்தவரென்பது, சுசிந்தைமான்மியத்தில் காட்சிகொத்த மகிமையில்

"பதிதிரு முன்னம் பணிந்துநன் னீரிற் பாதங்கள் விளக்கியந் நீரைக்
கதியுறச் சிரத்திற் றூவியுள் ளன்பாய்க் கடிமல ரிட்ட ருச்சித்து
விதிமுறை வணங்கி மூவலம் வந்து மென்மலர்க் கரங்குவித் தருகே
துதியொடு நின்ற தனதுயிரனைய தோகையோடேகினன் உறையுள்"

என்னும் பாடலிற் கூறப்படுகிறது.

மழையின்மையால் மானிலத்துயிர்கள் வருந்துவனதக் கண்டிரங்கி, மழை பொழியச்செய்து மனமகிழ்ந்திருந்த இக் கற்பரசியாரின், கற்பின் மாண்பை நன்கறிந்தே, தெய்வப் புலமைத் திருவள்ளுவர். "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவள் பெய்யெனப் பெய்யு மழை" எனத் திரு வாய் மலர்ந்தனர் போலும்.

இவ்வுத்தமியார், மும்மூர்த்திகளைக் குழந்தைகளாக்கின மையும் குழந்தைகளாகிய அன்னோரை மும்மூர்த்திகளாகச் செய்தமையும், நோக்குமிடத்து தன் நாயகனையன்றி எத்தகையோரையும் மதியாத இவரது மனக்கற்புறுதி வயிரக் கல்லினும் வலி மிகுந்ததன்றோ.

இம்மாது சிரோமணியார், இரும்புப்பொடிகளைக் கடலை களாய்வறுத்து நாரதமுனிவர்க்குக் கொடுத்தனர் எனச்சொல்வ துண்டு. தலபுராணத்தில் இது கூறப்படவில்லை.

அத்திரிமுனிவரும் அவர் மனைவியும், இல்லறத்திருந்து பரமுத்தியடையும் வழியை நமக்குக் கற்பிக்கவந்த வேத வித்துக்களாகிய பரமாசிர்களாவர். இவர்கள் உற்பத்தியாதிகளை ஸ்ரீ பாகவதத்தில் விரிவாய்க் கூறப்படுகிறது.

தசரத தனயனாகிய ஸ்ரீ இராமபிரான், ஏழிரண்டாண்டு கானகம் புகுந்தகாலத்து, சித்திரகூடம் விட்டு தண்டகாரணி யம்புகும்போது, தானும் இளையபெருமாளும் சனகன்மாமகளும் அத்திரிமுனிவர் ஆச்சிரமத்தில், அம்முனிவராலும் அவர்மனைவி யாலும் உபசரிக்கப்பெற்ற விருந்தினர்களாய், ஒருதினம் தங்கியிருந்தனரென கம்பராமாயணம் ஆரணியகண்டத்தில்

(1) "முத்திருத்திஅவ் இருந்தனைய மொய் நகை யொடும்
சித்திரக்குனிச் சிலைக் குமரர்சென் றணுகினர்
அத்திரிப் பெய ரருந்தவன் இருந்த அமைதி
பத்திரப்பழு மரப்பொழில் துவன்ற புழுவம்"

(2) "காமமுதலாம்—முக்குறும்பற எறிந்தவினை வான் முனிவனைப்
புக்கிறைஞ்சினர் அருந்தவ னுவந்திது புகலும்"

(3) "குமரர் நீர் இவண் அடைந்துதவு கொள்கை யெளிதோ
அமரர் யாவரொடும் எவ்வுலகும் வந்தளவே
எமரின் யார்தவம் முயன்றவர்கள் என்றுருகினன்
தமரெ லாம்வர வுகந்தனைய தான முனிவன்"

(4) "அன்னமா முனியோ டன்றவண் உறைந் தவனரும்
பன்னி கற்பின் அனசூயை பணியால் அணிகலன்
துன்னு தூசி னெடு சந்திவை சுமந்த சனகன்
பொன்னொ டேகி உயர் தண்டக வனம் புகுதலும்."

என (4) கவிகளிற் கூறப்படுகின்றன.

அத்திரி முனிவர் கண்ணிடத்து நின்றும், ஈரெட்டுக் கலைகள் நிரம்பிய சந்திரனது உற்பத்தியாமென, வில்லிப்புத்தூரார், பாரதத்தில்,

"பத்திரட்டியி னீரிரண் டொழிந்த பல் கலையோன்
அத்திரிப் பெயர் அந்தணன் அம்பகந் தனிலும்"

எனக்கூறி இருப்பதும் காண்க.

பெறுதற்கரிய பெருந்தவயோக ஞான முனிவராய், இல்லறத்திருந்தே பரமுத்தி அடைந்த அத்திரி முனிவரும், அவர் மனைவியுமாகிய இன்னோர் மகிமையை ஆராயும்போது, துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய, பிரபுலிங்க லீலை என்னும் நூலில், விமலை கதியிற் கூறும் ஒரு கதை ஞாபகத்திற்கு வருகிறது, அதுபின் வருமாறு.

வள்ளிகாவையெனும் பதியில், வேதோத்தமராய் விளங்கிய நிராங்காரன் என்னும் பெயருடைய அந்தணர், சுஞ்ஞானி எனும் பெயருடைய உத்தமக் கற்புடைய மனைவியுடன்

இல்லறத்திருந்து, பக்திவைராக்கிய ஞானச்சித்தமுடைய தவ யோக ஞானநெறிச் செல்வராய் வாழ்ந்து வந்தனர்.

அருமறைச் செல்வராகிய இவர் உத்தமச் சத்புத்ரப் பேற்றை விரும்பினர். அது, விமலைகதி 21–ம் கவியில்

"உடம்பைப் பொறியைக் கரணத்தை யுயிரைத் தானென்றுழலாமல்
அடங்கத் துறந்து தனையறிந்து பேதாபேத மென்னுமயல்
கடந்திட் டிருக்கும் பரமுத்தி காட்டும் புதல்வன் வேண்டுமென
இடும்பைப் பிறவிநோய் தணிப்ப எண்ணும் மனத்தா-னெண்ணினன்"

எனக் கூறப்படுகிறது. இவரது ஞானநாட்டமுடைய மனதில் இவ்வாறு எண்ணியவராய், (9) திங்கள் சிவயோகசமாதி யுற்றிருந்தனர். இப்பெரியாரது நெற்றிமிசைப் பரஞ்சோதி திரண்டு குழவியுருவாகி நின்றமையைக் கண்டனர் என்பது, விமலைகதி 27–ம் கவியில்

"ஒருங்கு மனமோ டினையசிவ யோக சமாதி நவதிங்கள்
நிரம்ப இருந்த காலத்து நெற்றி மிசையிற் பரஞ்சோதி
திரண்டு குழவி யுருவாகிச் சென்று புறமுற் றிட வதனை
விரும்பு மிருவர் தாமுமுடன் விழிகள் திறந்து கண்டனரால்"

எனக்கூறியபடி இப்பெரிய ஞானச்செல்வர் தமது ஞான நோக்கில் தம்முள்ளே பெருகியெழும் பேரானந்தமே பிள்ளை யாய் முன்னின்றமை கண்டு, அளவிலாப் பெரு மகிழ்வுற்றார், அப்புதல்வர். (அல்லமாப்பிரபு) எனத் திருநாமமுற்று, சச்சிதா னந்த சொரூப ஆன்ம நிலையை உபதேசித்து, தந்தை தாயினை உய்யச்செய்தமையன்றி, இவ்வுலகையும் உய்யச்செய்தருளி னர் எனக் கூறப்படுகிறது.

புராணம் இதிகாசம் முதலிய நூற்களிற் கூறும் பெரியார் கதைகள், வெறுங்கதை மாத்திரமன்று, வேதப்பொருளை விளக்க வந்த அப்பெரியார் கதைகளில், வேத இரகசிய தத்துவக்கருத்துக்கள் உட்பொதிந்து அடங்கிக்கிடக்கின்றன என்பது இங்குக் கவனிக்கற்பாலதே.

---

# சுசிந்தைப் பிரபந்தம்.



## (1) மார்கழி மதி மாண்பு
## (2) மார்கழித் திருவிழா மாண்பு
## (3) சிவதாணு அந்தாதி.

**இம் மூன்று பிரபந்தங்கள் அடங்கி இருக்கின்றன.**

### சிவதாணுநாதர் துதி.

நேரிசை வெண்பா.

மார்கழி மாண்பம் மதிவிழா மாண்போடு
நீர்கெழுமாச் செஞ்சடைசேர் நின்மலர்க்குத்—தார்கெழுமோர்
அந்தாதி யிம்மூன் றறையத் திருக்கருணை
தந்தாளுந் தாணுமலர்த் தாள். (1)

### திருக்கோன்றையடித் துதி.

முன்னுரைத்த மாண்புமுதன் முப்பிரபந் தம்மொழிய
என்னுளத்தின் மன்னியிருந் தெஞ்ஞான்றுந்—தன்னருளை
எற்கருளிக் காக்கும் எழிலார் சுசிந்திரத்திற்
பொற்கடுக்கை நாதனடிப் போது. (2)



# மார்கழி மதி மாண்பு.

---o---

## மார்கழி மாதத்தின் மகிமை.

### எழுசீர் ஆசிரிய விருத்தப்பாக்கள்.

பூவுல கத்தோர் தமக்கொரு வருடம்
புங்கவர் தமக்கொரு தினமாம்
மேவுமத் தினந்தை மதிமுத லாறும்
மிளிர்பக லுத்தர வயனந்
தாவுகற் கடக மதிமுத லாறுந்
தகுமிர வென்பர்தெற் கயனந்
தேவர்கட் கினிதாம் முதலய னத்தைச்
செப்புநூன் முறைப்படி தெரியின். (1)

தேவருந் தேவர் தலைவருஞ் சிறப்பார்
சிருட்டியா தித்தொழிற் செய்யும்
மூவரும் மூவர் முதல்வனும் முக்கண்
மூர்த்தியுஞ் சத்திகள் முதற்றே
யாவரும் யோகத் துயிலொழி கடைநல்
யாமமாம் மார்கழி யிதின்மாப்
பாவெனுந் திருவெம் பாவையிப் புவியோர்
பாடுவர் இறைகழல் பணிந்தே. (2)

இங்கித னுண்மை மார்கழி மதியில்
இறைவர்தங் கோயில்க ளெங்குந்
துங்கவை கறையிற் றிருப்பள்ளி யெழுச்சி
தோன்றலே சான்றுமற் றுன்ற
புங்கவர் குழுவோ டயனரி முதலோர்
போற்றுமா தேவனா ரருளாற்
பொங்குமா ருத்ர மூர்த்தியாய் மன்றுட்
பொலிந்தவத் தனுவினும் புகலின். (3)

பூரண வகண்ட பரசிவந் தன்பாற்
பொருந்திய மாபெருஞ் சத்தி
காரண மாமுக் குணத்தொடு கலந்து
கமலனா தியரைமுற் கொண்டு
தாரணி வுயிர்கள் தந்தவை யியங்கத்
தகுமுய ராதிரைத் திருநாள்
ஆரண முழங்க ஆடுமவ் விறைதன்
அருட்பொலி தனுமதி யாமே. (4)

தோன்றிநின் றழியுஞ் சராசர வுலகஞ்
சொற்றமா சத்தியி னொடுங்க
ஆன்றவச் சத்தி யொடுங்கிய யாவும்
அத்திரி குணத்தினின் முறையே
ஈன்றிட இயக்கும் பரசிவ லீலை
இத்தனு மதியெனி னிதனைப்
போன்றொரு மதியும் புகலுதற் கரிதாம்
புனிதவா திரையினைப் புகல்வாம். (5)

திருவாதிரை நாள் மகிமை.

இறைசிவ னருளே மாபெருஞ் சத்தி
இதுபரை யாதிசத் திகளாய்
நிறையுமின் னமுத ரூபமாய்த் தோன்றி
நின்மலன் றன்னொடு மொன்ற
வுறையுநா ளுயர்ந்த தன்றிரு நாளா
யுவந்தருட் டிருநடம் புரியும்
அறையுமூ வொன்பா னாளினுஞ் சிறந்த
ஆதிரை நாளினில் அமலன். (6)

நீங்குவி காரப் பரசிவத் துதித்த
நிகரிலா ஞானமா சத்தி
வீங்கிய வுலகம் படைத்தளித் தழிக்கும்
மேதகும் அயனரி யரற்குத்
தாங்குற மூன்று சத்தியுந் தொழிலுந்
தன்னரு ளாணையா லீய
வோங்கிய நாளாம் ஆதிரை நாளை
யொப்பதோர் நாளுமீண் டுளதோ. (7)

பொன்றிணி கோயிற் பொலிந்தெழில் பொங்கப்
புலிமுனி பதஞ்சலி போற்ற
மன்றுணின் றாடி யுலகெலாம் வாழ்த்த
மாபெரு முருத்திர னாகி
இன்றுணை யுமையோ டினிதருட் புரிய
இத்திரு வாதிரை யென்னுந்
தன்றுணை யில்லான் காட்சிதந் தருளுந்
தன்புகழ் சாற்றுதற் கெளிதோ. (8)

* திருஞான சம்பந்தர் திருவாதிரை நாளைப் புகழ்ந்த மகிமை.

சாற்றுமீ ராறு மதிகளி னெவ்வோர்
தருமதி மாண்பினும் மிக்க
ஏற்றமா மிக்த மார்கழி மதியின்
இலகுநீ ராடிமா மயிலை
ஏற்றுயர் கொடியோன் ஆதிரை காணு
தேகுதி யோவென விரங்கிப்
போற்றுபூம் பாவைப் பதிகத்திற் காழிப்
புனிதனர் புகழ்ந்ததிந் நாளே. (9)

† அப்பர் ஆதிரை நாளைப் புகழ்ந்த மகிமை.

திருந்திய செம்மைச் சீரடி யவராந்
திருநாவுக் கரசெனுஞ் செல்வர்
மருந்தினு மினிய தமிழ்மறை யதனின்
மார்கழி யாதிரை மாண்பைப்
பெருந்திரு வாரூர் ஆதிரை யென்னும்
பீடுறு பதிகத்திற் புகழ்ந்து
பொருந்திய முத்து விதானமென் றெடுத்துப்
புகன்றதும் போற்றிடத் தகுமே. (10)

---

* திருஞானசம்பந்தர் திருவாதிரை நாளைப் புகழ்ந்து பாடி அருளிய திருமயிலாப்பூர் பூம்பாவைப் பதிகத்தேவாரம், அடியில் வருவது காண்க.

"ஊர் திரை வேலை யுலாவு முயர் மயிலைக்
கூர் தரு வேல் வல்லார் கொற்றங் கொள் சேரிதனிற்
கார் தரு சோலைக் கபாலீச் சுர மமர்ந்தான்
ஆதிரை நாட் காணுதே போதியோ பூம்பா வாய்."

இப்பூம்பாவைப் பதிகத்தில் (12) மாதச்சிறப்புகளும் கூறப்படுகின்றன. இப்பாடல் மார்கழிமாதத் திருவாதிரைச் சிறப்பினைக் கூறுகிறது.

† அப்பர் ஆதிரை நாளைப் புகழ்ந்து பாடியருளிய திருவாரூர் திருவாதிரைத் திருப்பதிகத்தேவாரம் அடியில் வருமாறு.

"முத்து விதான மணிப்பொற் கவரி முறையாலே
பத்தர்க ளோடு பாவையர் சூழப் பலிப்பின்னே
வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிகள்
அத்தன் ஆரூர் ஆதிரை நாளால் அது வண்ணம்."

### மாணிக்கவாசகர் மார்கழி மதியைப் புகழ்ந்த மகிமை.

இன்னருட் சத்தி தனைவியந் திம்மார்
கழியினீர் ஆடேலோ என்ன
பன்னியே புகழ்ந்த வாசகத் திருவெம்
பாவையிற் பாடினர் பரமன்
றன்னருட் பொலியும் வாதவூர்ச் செல்வர்
சாற்றுமைம் தொழில்களே யாற்ற
மன்னருள் நடனம் ஆடுநம் மிறைவன்
மாத்தனு வாதிரை மகிழ்ந்தே. (11)

### நடராஜ மூர்த்தி நந்தனார்க்கு ஆதிரைத் தெரிசனம் அருளிய மகிமை.

புண்ணியர் போற்றும் நந்தனார் மன்றிற்
புரிநடந் தொழுதிடப் பன்னாள்
எண்ணிய காதல் பெருகவே தமக்கங்
கேகுத லரிதென வருந்தி
நண்ணுவன் நாளை யெனநனி நினைந்து
நற்றனு வாதிரை நடனங்
கண்ணுத லருளாற் கண்டடி யடைந்தார்
கருதுமா திரைப்புகழ் பெரிதே. (12)

### $ திரு கண்ணபிரான் கீதையில் மார்கழி மதியைப் புகழ்ந்த மகிமை.

நீடுமெவ் வுலகப் பொருளுந்தன் மயமாய்
நிகழ்வது பொதுமையாஞ் சிறப்பே
தேடுமப் பொருளிற் சிறந்தன யாவுஞ்
செப்பிடுந் தானெனத் தெரித்து
மேடமே முதலாம் மதிகளிற் றனுவே
மிகச்சிறந் ததுவென விளக்கி
நாடுமா தவன்றன் கீதையிற் புகழ்ந்த
நலமிகு மார்கழி மதியாம். (13)

---

$ ஸ்ரீ (கிருஷ்ணபரமாத்மா) திருக்கண்ணபிரான். பகவத் கீதையில் மார்கழி மதியைப் புகழ்ந்தருளிய சுலோகம். அடியில் வருவது காண்க.

"മാസാനാം മാർഗ്ഗ ശീർഷോഹം; ഋതൂനാം കുസുമാ കരഃ"

மார்க்கசீர்ஷம் = மார்கழி மாதமாம்.

### புறமதத்தோர் மார்கழிமதியைப் புகழ்தல்.

செப்புமிம் மதியைச் சிவசம யத்தோர்
சிறப்புடன் போற்றலே போல
இப்புவி யரனின் வைணவர் தாமும்
இராப்பக லேத்துவ ரினிதாய்
* அப்பர சமயத் தவர்களு மிந்த
அணிதனு மதியினைப் புகழ்ந்து
ஒப்பிலா விறைவன் உலகுய்ய வுதித்த
ஓங்குமா மதியென வுரைப்பர். (14)

### மார்கழி நீராடலை விஞ்ஞான நூல்வல்லோர் புகழ்தல்.

பூங்கதிர் வடபாற் பொருந்தவுற் றிடுகாற்
புவனியிற் சராசர மனைத்தின்
ஓங்குயி ருடல்கள் வளருதற் குரிய
வொண்கதிர் வழங்குசத் திகளைத்
தாங்கிநன் னீரின் நிலைகளே படிவோர்
தங்களுக் குதவலாற் றனுவில்
ஆங்குநீ ராடற் புகழ்வர்விஞ் ஞான
ஆராய்ச்சி நூல்வலோ ரன்றே. (15)

### மார்கழி நீராடலின் இயற்கை மகிமை.

தினமும்வை கறையிற் றுயிலெழுந் திரவி
தொன்றுமுற் செழும்புன லாடல்
இனியதே யதினும் முன்பனிப் பருவம்
இயைந்தவிம் மதியினிற் காலைப்
புனிதநீ ராடு மவருடற் றிடமாயப்
பொங்கொளி பொருந்தலாற் பெரியோர்
தனுமதி யதினீ ராடலைப் புகழ்ந்தார்
சாற்றுமிவ் வியற்கையாற் றூனே. (16)

---

* பரசமயத்தவர்—அன்னியமதஸ்தர்.

மாாகழி மாண்பைத் தோகுத் துரைத்தல்.

அண்டா்கோன் முதலோர் பணிந்ததும் அனைத்தா
யெங்களிற் றிருப்பள்ளி யெழலும்
விண்டுமா தவத்தோர் புகழ்ந்ததும் இறைவன்
விளங்கரு ளுருத்திர மூர்த்தங்
கொண்டுமா வின்பக் கூத்துகந் ததுவும்
கூறுமா திரையொடு திருவை
குண்டநல் லேகா தசிவரு மதியுங்
குனிதனு மதியதா மன்றே. (17)

திருவாதிரை மாண்பைத் தோகுத் துரைத்தல்.

பரசிவத் திடமோர் ஞானமா சத்தி
பரந்துமுற் றோன்றுமா நாளும்
திருவருட் பொலியா ருத்ரனுய் மன்றிற்
றிருநடம் புரிந்திடு தினமும்
பெருமொரு மூன்று முதல்விமார் முதலாய்ப்
பேணிநோன் பியற்றிடும் பகலும்
அரும்பய னேற்போர்க் கருள்சிவ னாளாய்
அறையுமா திரைத்திரு நாளே. (18)

நாரதமுனிவர் மார்கழிமாண்பும் திருவாதிரைமகிமையும்
மூவர் மனைவியர்க்கு மொழிந்தமை.

இத்தனு மதியின் இலகுமா திரையின்
இயல்பையும் இத்திரு நாளின்
அத்தனை நினைந்தே யாற்றிடும் நோன்பும்
அடைவரும் பெரும்பய னடைவும்
முத்தனு ரதன்மும் மூர்த்திகள் மனைமார்
மூவர்க்கு மொழிந்தனன் முன்னுட்
கத்தனை விளக்குங் காந்தமா கதையிற்
கழறிய மாண்பெலாங் கருதி. (19)

### மும்மூர்த்திகளின் மனைவியர் ஆதிரை நோன்பு இயற்றினமை.

மார்கழி மதியின் மாண்பினை யுணர்ந்து
மருவிய ஆதிரை நோன்பைப்
பேர்கெழு முனியன் உரைத்தவா றியற்றிப்
பிரிந்ததங் கணவரை அன்பால்
ஏர்கெழு முமையோ டிலக்குமி வாணி
யெய்தினர் தம்பத மொருங்கே
பார்கெழு மாந்தர் பலருமிந் நோன்பின்
பயனறிந் திடமுறை பகர்வாம். (20)

### ஆதிரை நோன்பை ஆடவர் நோற்குமுறை.

இன்னவா திரைநோன் பியல்விருப் புடனே
இரவிதோன் றிடுமுன மெழுந்து
பன்னலம் பெருகுஞ் சுசிந்தையம் பதியிற்
பகரும்ஞா னத்தடம் மூழ்கி
மன்னிய தாணு மாலயற் போற்றி
வலமுற வந்துமைந் தெழுத்தைப்
பொன்னடி நினைந்து விதிமுறை செபித்தும்
புருடர்நோற் றிடுமுறை யிதுவே. (21)

### ஆதிரை நோன்பை அரிவையர் நோற்கு முறை.

நற்றவர் போற்றும் ஆதிரை நாளின்
ஞானமா சத்திவந் துதிக்கப்
பெற்றதா லிந்தச் சத்தியை யிந்நாட்
பிரணவ ரூபமாய் வணங்கப்
பொற்றக டதனிற் சத்திமந் திரத்தைப்
புனிதவைந் தெழுத்தொடும் பொறித்துக்
கற்றையஞ் சடையார் திருமுனே வைத்துக்
கமழும்நெய் தீபமுங் கண்டே. (22)

கண்டவிம் முறையே காரிகை மார்கள்
கருதிநோற் றிடுவதாய்ப் பின்னும்
விண்டவச் சத்தி மூலமந் திரத்தை
விதிமுறை யெண்ணியேழ் மலர்கள்
கொண்டருச் சித்து எழுவகை யமுதாற்
கூறுமேழ் நாட்களா யேத்தி
அண்டரும் போற்றும் ஆதிரை நோன்பை
ஆற்றுவோ ரடைபய னனந்தம். (23)

## இந்திரன் மார்கழித் திருவிழாவும் ஆதிரை நோன்பும் இயற்றினமை.

இந்திரன் றன்பா லெய்திய பாவ
இரும்பழி யகற்றிய சுசிந்தைச்
சுந்தரற் கன்பாற் றனுவிழா வெடுத்துத்
தூயவெள் விடையின்மே லிறைவன்
வந்தருட் புரியுங் காட்சிகண் டேத்தி
வருதிரு வாதிரை மறைநூல்
மந்திர மோதி நோற்கமா வளங்கள்
வழங்கிய தீசனுள் மாண்பே. (24)

## திருவாதிரை நோன்பின் மகிமை.

முந்துநூன் மொழிந்த நோன்புகட் கெல்லாம்
முதன்மையாஞ் சோமவா ரத்திற்
சந்தமாய் நோற்ற லன்னநோன் பினுமேற்
றனுத்திரு வாதிரை நோன்பாம்
எந்தவா றென்னின் நோன்பினற் பயனை
ஈபவன் அருட்டிரு வுருவாய்
வந்தமா நாளாம் ஆதலா லீசன்
மகிழுமந்நா ளிதனின்மற் றுளதோ. (25)

## ஆதிரை நோன்பு இயற்றுவோர் அடையும் பயன்.

பனிமதி யணிந்த பரசிவ னுளாய்ப்
பகர்திரு வாதிரை மாண்பை
உனிமதி யாலந் நோன்பினை நோற்போர்
உளங்கரு தியவெலா முறுவர்
தனுமதி வருமா திரைமுத லாகத்
தகுமொரு வருடமித் திருநாள்
துனுமதி தோறு நோற்றிடிற் சூழுந்
தொல்பவந் தொலையுமெய் யாமே. (26)

அவதாரிகை.

இணையமா மதியின் ஆதிரை நாளின்
இலகுமாண் பியம்பரி தெனன
முனிவர்மா தவத்தோர் போற்றுநா ரதமா
முனிவனே மொழிந்தன னெனினத்
தனுமதி யாதி மாண்பினைச் சாற்றத்
தமியனேற் கெளியதோ தரைமேற்
புனிதநற் பதியாஞ் சுசிந்தையா லயத்திற்
புகழ்விழா மாண்பினிப் புகல்வாம். (27)

மார்கழி மதிமாண்பு முற்றுப் பெற்றது.

ஆகச் செய்யுள் (29)

# 2-ம் பிரபந்தம்
# மார்கழித் திருவிழா மாண்பு.



இதில் மார்கழி மதிதோறும் திருச் சுசிந்தையம் பதியில் நடைபெறும் பெருஞ் சிறப்புடைய காட்சி மிக்க திருவிழா (10) நாட்களில், சிவதாணுமாலயமூர்த்தி திருப்பவனி எழுந்தருளித் திருவருள்புரியும் சிறப்பும், திருவிழா தத்துவங்களும் கூறப்படுகின்றன.

முதல் திருநாள் கோடியேற்றுச் சிறப்பு.

1. திருந்தணி கோயிற் குணதிசை முன்னே
சிறந்துயர் பந்தரிட் டழகாய்ப்
பெருங்குலை வாழைக் கமுகிளெண் பழமும்
பீடுறு தெங்கிளங் குலையும்
மருங்கெழிற் கரும்பும் இயைவுறச் செய்து
மாங்கனி மரைமலர் தூக்கி
அருந்தவத் தேவ ருலகெனச் சுசிந்தை
அடியவர் அழகெலாம் அமைத்தே. (1)

2. உலகெலாம் படைத்த லாதியைந் தொழிலும்
ஓங்குமன் ருடலாற் புரியும்
நிலவுலாஞ் சடையார்க் குரியவா திரைநாள்
நீள்தனு மதியுறும் போதின்
அலகிலா னந்தம் இம்மையே யளிக்கும்
ஆருருத் திரன்றிருக் காட்சி
மலர்தரும் அதன்முற் சதயநன் னாளின்
மணிக்கொடி யேற்றுவர் மன்னோ. (2)

3. தனிமுதற் பரனும் தாணுதன் அருளால்
தகுமுயர் கொடிமரத் தடியிற்
பனிமலர் தருப்பை சூலமும் அணிந்து
பகருமர்ச் சகர்சிவ மனுவால்
இனிதியற் றிடுமா பூசனை புரிந்தான்
ஏற்றுயர் கொடியதேற் றிடுவர்
துனுமுயிர் களின்மும் மலங்களை யகற்றத்
தூக்கிய துவசமே யெனலாம். (3)

2-ம் திருநாட் காலை திருவீதித் திருத்தொண்டுச் சிறப்பு.

1. ஏற்றின்மேல் எழுந்தெம் மிறைவனார் சுசிந்தை
எழிலுறு வீதிகள் எங்கும்
தோற்றுவர் அதனால் வீதியிற் றுகளே
தோற்றிடா தகற்றிடும் தொழிலை
ஆற்றுவம் யாமும் அப்பர்செய் தொண்டும்
அரனருள் தருவது மிதுவாம்
போற்றுவம் என்று திருவிழா விரண்டிற்
புரிவரன் பினர்பல பணிகள். (4)

மாலையிற் பூம்பந்தர்ப் பவனி.

2. தேனு லாமலர்ச் சோலை சூழ்திருத்
தென்சு சிந்தையின் வந்தொளிர்
வானு லாவிய சோதி யாமென
மகிழ்வி ழாவிரண் டிரவினிற்
கானு லாவிய பன்மலர்த் தொடை
கவினு றப்புனை பந்தரின்
மானு லாம்விழி மாது சேரிறை
வைய முய்யவந் தருள்வனே. (5)

3-ம் திருநாட் காலை பூம்பந்தர்ப் பவனி.

1. திருவாழு மார்பனொடு திகழ்தேவ தேவன்
சிவதாணு நாதனெனும் தென்சுசிந்தை யீசன்
பெருவாழ்வு பெற்றுலகை முய்யவருட் சத்தி
பிரியாம லுடனுறையப் பெருமானை முகனும்
முருகாருங் கடப்பமணி முருகேச னவனும்
முன்னேக முந்நூற்று நங்கையொடு சைவத்
திருவாசகப்பெருமான் பின்னாக மூன்றும்
திருநாளிற் பூம்பந்தர் திகழவெழுந் தருள்வான். (6)

மாலையிற் கற்பகத்தருப் பவனி.

2. ஈன்றாளும் பெருமானே போற்றி யென்றும்
எம்பவநோய் தீர்த்தருளும் இறைவா வென்றும்
வான்றோன்றும் அமரரொடு முனிவ ரேத்தி
மலர்மாரி பொழிந்திடவிப் புவியோர் வாழ்த்த
தேன்றோன்றும் கற்பகமாத் தருமீ தேறித்
தென்சுசிந்தை யண்ணலவரு திருவி ழாவாம்
மூன்றாகும் நாளிரவின் காட்சி தன்னை
மூவுலகின் யாவர்தாம் மொழிய வல்லார். (7)

4-ம் திருநாட் காலையிற் பூதவாகனப் பவனி.

1. அருட்பொலி மூர்த்தி யான அமலனஞ்
சுசிந்தை வீதி
திருப்பொலி மார்பன் சூழத் திகழ்பூத
மீதி லேறி
இருட்பொலி மிடறு தோன்ற எழுந்தனன்
விழவோர் நான்கில்
தெருட்பொலி யடியார்க் கெல்லாம் திருவருட்
பொலிய மாதோ. (8)

மாலையில் நாற்காற் பூம்பந்தர்ப் பவனி.

2. ஆலான தருவிலொரு நால்வர்க் கந்நாள்
அருட்குருவாய் மோனநிலை யருளு மையன்
மேலான சுசிந்தையம் பதியின் கண்ணே
விரையாரும் மலர்த்தொடைமேல் விளங்கத் தோன்றிச்
சேலான விழியுமையாள் பாகந் தோன்றச்
சீரடியார் திருவருளிற் றிளைக்கு மாறு
நாலான திருவிழா இரவிற் றாய
நாற்காற் பூம் பந்தரின்வந் தருள்வ னன்றே. (9)

5-ம் திருநாட் காலை திருநந்திவாகனப் பவனி.

1. மாதொரு பாகத் தெம்மான் வளமிகு தென்சு சிந்தை
நாதனுய்த் தருமத் தேவ நந்திவா கனமேற் றாய
வீதிவை கறையிற் சேர்த்தி மிகுதிரு விழவோ ரைந்திற்
சோதியா யெழுந்த காட்சி தொண்டருக் கமுத மாமே.
(10)

2. மாதவத் தோர்க ளெல்லாம் மலரடி பணிந்து போற்றிச்
சீதநன் னறுநீர் தூவச் சீர்மலி விழவோ ரைந்தில்
ஆதியான் காலைப் போதின் அறவிடை மீது தோன்றி
காதல்நந் தனுக்காய் தென்பாற் காட்சிதந் தருளு வானே.
(11)

மாலையிலும் திரு நந்திவாகனப் பவனி.

3. சிந்துர முகனும் அறுமுகத் தேவும்
சிறந்ததம் மூர்த்தியிற் சேர்ந்து
முந்துற வரவும் ஒருமருங் கனமேல்
மூதறம் வளர்த்தவ ளுறவும்
செந்திரு மார்பன் கலுழன்மே லெழுந்து
செறிந்தரு குறவுநற் சிறப்பாய்
ஐந்தெனும் விழவின் இரவினிற் றூணு
அருள்விடை மீதுவந் தருள்வான். (12)

4. தேவுல கத்தோர் தமதிறை பழியைத்
தீர்த்தருள் சுசிந்தைவாழ் தாணு
பூவுல கத்தோர் புகழ்விழா வைந்திற்
புண்ணிய வெள்விடை யேறி
மேவிடுங் காட்சி மீமிசைக் கண்டு
விரைமலர் பொழிந்தபோல் மீதே
ஆவலோ டன்பர் பூமழை பொழிய
அண்ணல்வந் தருள்புரிந் தருள்வான். (13)

6-ம் திருநாள் காலையிற் சமணரைக் கழுவேற்றப்
பூம்பந்தர்ப் பவனி.

1. இறைவியார் ஞானப் பாலினை யூட்டி
இன்றமிழ் மறையினைத் தந்து
நிறைபுகழ் கொண்ட காழிவேந் தருக்கு
நேரின்ப துன்பங்கள் தனதாய்ப்
பிறையணி சடையான் கருதியன் னவர்பால்
பிழைபுரி சமணரைத் தண்ட
முறைசெயக் கழுவி லேற்றிடற் காரும்
* முருகுபூம் பந்தர்வந் தருள்வான். (14)

மாலையிற் பூம்பந்தர்ப் பவனி.

2. மேலுறை தேவர் கோமான் மிகுபழி போக்கி நால்வர்க்
காலமர்ந் தருளு மையன் ஆரூரர் பொருட்டாய் நற்றீம்
பாலுரை பரவை யில்லிற் பகரிராத் தூதிற் கேகி
நாலுயர் மறுகு தோறும் நாதன்வந் தருளு வானே. (15)

* முருகு—திருவிழா.

8. உருவுடை மாதர் தம்பா லுற்றிடுங் காதல் நீத்தோர்க்
குரியதாம் முத்தி யென்ன வுரைத்தவன் பரவை பாலே
திருவடி வருந்து மாறு சிறந்தநற் சுசிந்தை வீதி
இரவினிற் றாதிற் காக எழுந்தருள் புரிந்தா னம்மா. (16)

(7)ம் திருநாட்காலையிற் போற்சிவிகைப் பவனி.

1. விண்ணுளோர்க் கரிய நாதன் மிகப்பெருங் கருணை யாலே
மண்ணுளோர்க் கெளிய னாகி வளர்புகழ்ச் சுசிந்தை தன்னில்
கண்ணுளோர் கண்டு போற்றக்கவின் றிருச் சிவிகை மீதே
எண்ணுமேழ் விழவிற் காலை இனிதுவந் தருளுவானே.(17)

மாலையில் திருக்கைலாயப் பவனி.

2. வள்ளியோ ராகும் மேழியஞ் செல்வர்
வளமுடை மருதநீள் வயலில்
துள்ளியே வாளை கமுகின்மேற் பாயும்
தொல்புகழ் நன்செய்நன் னாட்டின்
நள்ளுறு சுசிந்தை நாதனோர் விரலால்
நாலைந்து தோளினை யழுத்தி
வெள்ளியங் கிரியில் விளங்குநற் கோலம்
வீதியிற் காட்டுவன் மன்னோ. (18)

3. மலர்தலை யுலகின் மாவிரு ளகற்றி
மகிழ்ச்சிதந் தருள்கதிர் போல
இலகுபல் லுயிர்க ளகவிரு ளகற்றி
இன்பளித் தருள்பரஞ் சோதி
பலர்புகழ் சுசிந்தைப் பதியினில் நிகழும்
பகர்விழா வேழினில் வெண்பொன்
நிலவிய கைலை மலையின்மே லெழுந்து
நிகரிலாக் காட்சிதந் தருள்வான். (19)

கட்டளைக் கலித்துறை.

4. சீர்மேவு தென்கயி லாயமென் றேபுகழ் சோகசிங்கை
ஏர்மேவு மோரேழ் விழவினில் வெண்பொன் னெழின்மலைமேற்
கார்மேவு கண்டன் சிவதாணு நாதன் கருணையினல்
தார்மேவு மாதுமை தன்னெடும் வந்தருள் தந்தனனே. (20)

8-ம் திருநாள் காலை திருநடனப் பவனி.

1. மன்னுமறை தன்னேடு மாலயற் கரியபொன்
மலரடி யெடுத்து மன்றுள்
துன்னுசிவ சத்தியோ டிருமுனிவர் தாம்கண்டு
தொழுதேத்த ஆடும் ஐயன்
பன்னுபுகழ்ச் சுசிந்தைநல் வீதியில் அடியார்
பல்கோடி கூடிப் பணியப்
பொன்னுலவு பூணுட நன்னுதலி யோடாடல்
புரிவனருள் முருகெட் டிலே. (21)

2. வானேடு கோனுட மாலோடும் அயனுட
மாமறை புகழ்ந்தா டிட
மானேடு மழுவாட மதியோடு நதியாட
வாளரவு கொன்றை யாட
தேனேடு பாலாடு திருமேனி யணியாடத்
திருவிழா வோரெட் டினில்
தானுடும் நடராஜர் சிவகாமி மாதோடு
தாரணியெ லாமுய் யவே. (22)

மாலையிற் பிட்சாடனப் பவனி.

3 மேலான தருவனத்தில் வேள்வி யாற்றும்
மிகுமுனிவர் பன்னியராய்க் கருவமுற்ற
வேலான விழிமடவார் மயங்கி யீந்த
மென்றளிர்க்கை வளையோடு பிச்சை கொண்ட
ஆலான தருவிருந்து காமற் செற்ற
அண்ணலிரு நான்காநாள் இரவு தன்னில்
சாலான வீதிவரும் நலமார் காட்சி
நற்றெண்டர் கண்டுமகிழ் நண்ணு வாரே. (23)

## 9-ம் நாள் திருத்தேர்ப் பவனி

### † சப்ரத் தேர் இழுத்துவரும் காரணம்.

1 சுரகுலத் ததிபன் றனதுடற் பழியைத்
தொலைத்தருள் சுசிந்தையம் பதியில்
நரர்குலத் ததிபன் நடத்தும்நல் விழவை
நயந்துதான் கண்டிட மூன்று
புரமுனம் பொடித்தோன் எழுந்தருட் பவனிப்
பொலிவினில் அன்புளே பொங்கிப்
பெருகவே வருதல் என்பரால் சப்ரப்
பெயருடைத் தெரின் மேலேறி. (24)

### திருத் தேர்ப் பவனி.

2 என்பெலா முருக இருகணீர் பெருக
இணைமலர்க் கரந்தலை யேற
அன்பராய்ப் பணியும் அவர்க்கெல்லாங் கருணை
அருளும்நா யகனுமை யுடனே
பொன்பொலி மலைநீள் சுசிந்தையம் பதியில்
பொருந்திய மாண்பென விழவோர்
ஒன்பதிற் புரவித் தேரின்மே லெழுந்து
ஓங்கருள் புரிகுவன் உவந்தே. (25)

3 சோதியாய்த் தோன்றும் உருவமாய் மறையின்
றொன்முடி விளங்கிடுந் தூய
நாதனே அன்பா லுண்ணெகிழ்ந் தோர்க்கு
நல்லருள் புரிந்திட நயந்து
வீதியிற் சுசிந்தை நவத்திரு விழவில்
மிகுபுகழ் நஞ்சைநன் னாட்டோர்
காதலாய்க் குழுமி ஈர்த்திடும் பெற்றோர்க்
கவினெலாம் யார்சொல வல்லார். (26)

---

† இச் சப்ரத் தேரில் இந்திரன் இருந்து திருவிழாச் சிறப்பினை நோக்கிவரும் காரணத்தால் இத்தேர் இவ்வாலயத்தில் மட்டும் விசேஷமாயமைந்திருக்கிறது. திருவிழாக்களில் சிறந்த திருவிழாவாகிய 5, 7, 9-ல் சப்ரத் தேர் சிறப்பாக இழுக்கப்படுகிறது.

9-ம் திருநாள் மாலையில் இடப வாகனப் பவனி.

4 உவந்தருந் தவஞ்செய் அத்திரி முனியோ
டோங்குகற் புடையன சூயை
பவந்தொலைத் தருள முன்னைநாள் மூன்று
பாலக ளாகி மேல் வானிற்
சிவந்திகழ் மூன்று மூர்த்தியாய்த் தோன்றித்
திருவருள் பொழிந்தநற் காட்சி
நவந்திகழ் விழவில் விடையின்மேற் றருணு
நாதன்வந் தருளுவன் நமக்கே. (27)

சத்தாவரணக் காட்சி.

5 நமக்கெலாங் கருணை யருளிவெள் விடைமேல்
நாயகன் சுசிந்தைமா நகரில்
உமைக்கிடம் வலமே கரியமாற் கருளி
உம்பர்கோன் பழியொழித் தன்பால்
இமைப்பருங் காட்சி இலகிடச் சூழ்ந்த
இபமுகன் அறுமுகன் எனுஞ்சேய்
தமக்கருள் அருளித்தன துறைவிடமே
சாருவன் தாணுமா லயனே. (28)

* சத்தாவரணத்தின் தாற்பரியம்.

6 காலமோர் மூன்றுங் கடந்தமாப் பொருள்தன்
கருணையா லருளுருக் கொண்ட
கோலமார் இலிங்க மூர்த்தியாய் முருகிற்
குலவுபல் ஊர்திமேற் கொண்டு
ஞாலமேற் சிறப்பாய் வந்தருள் புரிந்து
நவிலுமொன் பான்றிரு நாளின்
மூலவா லயத்துட் புகுவதைச் சத்தா
வரணமாய் மொழிகுவர் முறையே. (29)

* சத்தாவரணமென்பது, சத்து—அழியாப் பொருளாகிய இறைவன்; ஆவரணம்—மறைவு. ஆகவே அழிவின்றி விளங்கும் இறைவன் திருவிழாக்களில் வெளிவந்து (9)-ம் திருநாள் முற்றுப் பெறும்போது திருவாலயத்துள் புகுவது சத்தாவரணமென்று சொல்லப்படுகிறது.

10-ம் திருவிழாவாகிய திருவாதிரை நாட்காலையில்
திரு ஆருத்திரா தரிசனம் அருளலும், மாலையில் திரு நடராஜமூர்த்தி
திரு நடனமும்.

1 அயனொடு மாலுக் கரியனுய்த் தில்லை
அட்பலத் தாடுவோன் சுசிந்தைப்
புயல்தொடு மாடச் சிற்சபை பொலியப்
புனிதநெய் பால்தயிர் தேனும்
இயலுற வாடி இலகுநீற் றொளிசேர்
எம்பிரான் ஆதிரைத் திருநாள்
முயலகன் முதுகில் அன்பர்கண் களிப்ப
முதுநடம் புரிகுவன் முறையே. (30)

2 முதல்நடு வந்த மின்றிமுத் தேவும்
முக்குணப் பிரிவினின் முறையே
இதமுறத் தோன்றி இலகுமாப் பரனே
இரண்டறக் கலந்தஞா னியருட்
பதமுறப் பழுத்த பேருட் பழமாய்ப்
பகர்சுசீந் திரத்தடி யவர்க்குச்
சிதம்பரத் தாடற் பொலிவினை விளக்கச்
சிற்சபைத் திருநடம் உவந்தான். (31)

3 உவந்திறை அருளால் மூவர்முன் னுரைத்த
ஓங்குதே வாரப்பண் ணுடனே
பவந்தொலைத் தழியாப் பேரின்பம் பயக்கும்
பகர்கருங் கன்மனம் உருக்கும்
நவந்தரு மணிவா சகந்திருப் புசமும்
நற்றமிழ்த் தொண்டர்கள் நவில
சிவந்திகழ் அடியார் கண்மனங் களிப்பத்
திருநடம் புரிகுவன் சிவனே. (32)

4 சிவசிவ எனவே அடியவ ரோதும்
சீரொலி திசையெலாஞ் செல்ல
நவநவ மாம்பல் லியம்நனி முழங்க
நான்மறை வாழ்த்தொலி நவில
தவமிகும் அடியார் கண்மனம் களிப்பத்
தாவிருள் போயொளி தழைப்ப
அவமிகு வழியோர் நாண்மிகுந் தொளிப்ப
ஆடுவன் அருட்பெரு மூர்த்தி. (33)

5. மூர்த்தியாம் மூவர் முதல்வனுய் முக்கண்
முழுமுதற் கடவுளாம் முன்னேன்
ஆர்த்தியார் ஆன்மா மும்மல மழித்து
ஆனந்த வாரிதி யழுத்திச்
சேர்த்துயர் முத்தித் திருவடி யருளத்
தில்லையிற் றிருநடம் புரிவோன்
சீர்த்திசேர் சுசிந்தைப் பதிவிழாப் பத்தில்
திருநடம் புரிகுவன் சிறந்தே. (34)

திருவிழாத் தத்துவம்.

1. பொற்கொடி மரப்ஐ வகையிலிங் கத்துட்
புகலுமொன் றுமதிற் பொருந்தும்
நற்படம் ஆன்மா பாசநீள் கயிறும்
நவில்மரத் தடிநடு முடியே
அற்புத முறமும் மூர்த்திவா ழிடங்கள்
அணிதிருப் பூசனை யாதி
சிற்பர சிவமாய் நினைந்ததின் முறையே
செய்கவென் றுகமம் செப்பும். (35)

திருக்கோடி யேற்றிய பொழுது அக்கோடி
வான்மீ தாடித்தோன்றும் காட்சியினைய வேனல்.

2. பரசிவ னுலகில் பசுக்கள்பா சத்தை
பாற்றிமெய்ப் பதிநிலை விளக்கித்
திருவருள் புரியக் கருணையே யுருவாய்த்
திகழுமா வீதியிற் பவனி
வருவரிங் கடிய ரேவருங் காண
வம்மினென் றேகந்தி மகிழ்ந்து
கரமலர் நீட்டி அழைத்தலா மென்னக்
கவின்கொடி யாடுநற் காட்சி. (36)

3. இரண்டெனும் விழவில் இறைவனல் லடியார்க்
கிருவினை சமமுற அருளி
வருமொரு மூன்றில் அன்னவர் பால்மும்
மலபரி பாகம்வந் தெய்தக்
கருதிநான் கதனிற் றிருவருட் சத்தி
கவினுறப் பொலியுமா கண்டு
திருவிழா ஐந்தில் உயர்சிவ ஞானம்
சேர்ந்திட அருளுவன் சிறந்தே. (37)

4. ஆறெனும் விழவில் அன்னவர்க் கமலன்
அருஞ்சிவா னந்தமீண் டருளிக்
கூறுமேழ் முருகிற் றனதுசா லோகம்
கொடுத்தருள் புரிந்துமே லெட்டிற்
பேறென வருசா மீபமும் பின்னாள்
பெருகுசா ரூபமுங் கொடுத்து
ஏறுயர்த் தவன்றன் திருவடி சேர்ப்பான்
எழிலுறு பத்தினில் இனிதே. (38)

5. இன்னவா றிங்கவ் விறையவன் பவனி
எழிற்றிரு விழவினில் எழுந்து
மன்னுயிர் தம்மிற் பக்குவ முடைய
மாண்புறும் அடியவர்க் கனுதி
துன்னிய மலங்கள் அழித்துமேல் முறையாய்த்
தொல்பத முத்தியோ டழியாப்
பொன்னடி சேர்த்து மற்றுள மாந்தர்
புனிதமாம் வகையருள் புரிவன். (39)

6. தனுமதி முருகின் தத்துவம் இனவும்
சாற்றுநல் லாகமத் தொகுதி
பனிமதி யணிந்தோன் அடியவர்க் கிரங்கிப்
பகர்வரும் கருணையே புரிய
இனிதெழுந் தருளும் திருவிழா மாண்பை
இயன்றவா றியம்பினம் இனியத்
தனிமுதல் கமலத் திருவடி வழுத்தும்
தாணுவன் தாதிசாற் றுதுமே. (40)

மார்கழித் திருவிழா மாண்பு முற்றுப்பெற்றது.

ஆகச் செய்யுள் 40.

---

# 3-ம் பிரபந்தம்

# சிவதாணு அந்தாதி.



## கட்டளைக் கலித்துறை.

இவ்வந்தாதி கூறுவோமெனல்.

தேனார் கமழ்மலர்ச் சோலைகள் சூழ்திருத் தென்சுசிந்தை
வானு றணிசிவ தாணுவந் தாதி வழுத்திடுவாம்
மானார் கரத்தர னாதியர் மூவரும் மன்னிடுமோர்
கோனாகு மென்னிறை பொன்னடி யுன்னிக்கை கூப்பிநின்றே. (1)

மனமொழி மெய்களால் உனது திருப்பணி
இயற்ற அருள்வாயெனல்.

நின்று மறையடி மெய்யன்பொ டுன்னியென் னெஞ்சுருக
நன்றாக நிற்புகழ்ப் பாமாலை யென்றுமென் நாநவில
முன்றாழ்ந்து சூழ்ந்து பணிகுவ தென்மெய் முறைபுரிய
மன்றாடல் பேணு மறைதேடு தாணு மகிழ்ந்தருளே. (2)

என் மருளகற்றி ஆள்வாயெனல்.

அருளே! திருவுரு வானவனே! தாணு வாகிநின்ற
பொருளே! நிறைபரி பூரணனே யுண்மைப் போதவின்பத்
தெருளே! சிறந்தமெய் ஞானிய ருண்ணிறை சின்மயனே!
மருளே யகற்றி யெமையாள் வல்லவர் மற்றிலையே. (3)

தன்னை நினையார்க்கு அதிதூரத் தனெனல்.

இலைதரு முத்தலைச் சூலமே தேந்திய வெம்மிறையாய்
மலைதரு மாமகள் தன்னொடு மோருரு மன்னிடுவாய்
கலைதரு மாமறை யந்தத்து ணின்று களிநடன
நிலைதரு தாணு நினையார்க்குச் சேய்மையி னீண்டவனே. (4)

### மும்மூர்த்தி யுருவமாகிய காரணம் மொழிதல்.

நீடுந் திருமுடி காண்பான் விசும்பினும் நின்மலன்கூத்
தாடுந் திருவடி காண்பான் புவியினும் அம்புயன்மால்
தேடும் படிக்கரி தானேன் சுசீந்திரஞ் சேர்ந்தவர்பாற்
கூடும் படிதாணு மாலய ணுய்க்குடி கொண்டவனே.

### தாணுநாதன் இயல்பு இணையவெனல்.

கொண்டலை யொப்பா னடியவ ரானபைங் கூழ்தழை
பண்டித னொப்பான் பணிபவர் நோய்ப்பவம் பாறிட
தெண்டிரை யின்னமு தொப்பா னவருட் செறிந்தரு
எண்டிசை போற்றும் சுசீந்திரத் தாணு இயல்பிதுவே

### மனமே தாணுநாதனைப் போற்றி மகிழ்வாயெனல்.

இயலே சிறந்து அருளே வுறைந்து எழின்மிகுந்து
கயலே யிணைந்த விழியுமை யோடுங் கருணைநிறைப்
புயலாய்த் திருவடி யார்க்கருண் மாரி பொழிந்துமன
மயலேக வந்தருள் தாணுவைப் போற்றி மகிழ்மனமே

### தாணுநாதனை முற்காலத்துப் பூஜித்தோர் இவரெனல்

மன்மார வத்திரி யோடவர் புத்திரர் மாவசிட்டன்
சனகாதி யோர்தவச் சங்கர னிந்திரன் சாற்றுமிதே
முனநாட் பெருகன்பி னுற்பூசை யாற்றிமுன் னேபன
வனமாகும் ஞான வளம்பதி வாழ்தாணு மாலயனே.

### மும்மூர்த்திகள் அத்திரி முனிவன் பாலர்களாய் உதித்துப் பூஜித்தமை.

மாலய னேடர னுதிய ரத்திரி மாமுனிபாற்
சாலரு ளாற்சந் திரதுரு வாசதத் தாத்திரையப்
பாலர்க ளாயொரு மூவர்முற் பூசித்த பண்ணவனும்
ஆலம துண்டணி கண்டன் சுசிந்தையி லேம்முகனே. (9)

### பூஜிப்போன் பூஜையாதிகள் யாவும் தானேனெனல்.

முகமா மதியுமை யாளொரு பாலுடை முக்கணனே
சகமே லுனைப்பூசை செய்பவன் பூசனை தன்பயனும்
தகுமா பயனளிப் போனுநீ தானென தாணுவென
தகமே வுறைந்தரு ளேதந்து காத்தரு ளாண்டவனே. (10)

இந்திரனைச் சுசிசெய்தருளினமை.

ஆண்டவ னேயருள் வரயென் றமரர்க் கதிபதிமுன்
வேண்டிட நீயுன் விடையினைக் காய்ந்தநெய் மீதமிழ்த்திக்
காண்டக வங்நெய் யுறுவிடை யிந்திரன் கைகொடுமேல்
மீண்டிடச் செய்துநற் றூய்மை கொடுத்தருள் மேன்மையனே. (11)

இந்திரன் ஞானவனத்தைச் சுசீந்திரமென்றழைத்து
இறைவனை அர்த்தயாமத்திற் பூஜித்துவருதல்.

மேகத்தை யூர்ந்தவன் றன்சுசி பெற்ற மிளிர்பதிக்குச்
சோகத்தை நீக்குஞ் சுசிந்திர மாம்பெயர் சூட்டிவெள்ளை
நாகத்தி னுலொரு மாநதி கண்டெந்த நாளுமுமை
பாகத்த னைப்பாதி யாமத்தி லேபூசை பண்ணுவனே. (12)

தாணுநாதனை நினையாதவர் பிறவி நீங்காரேனல்.

பண்ணார் தமிழ்மறைத் தேவாரம் வாசகம் பாடிநின்று
கண்ணா ரருவி பெருகிட வுண்ணெகக் கைகுவித்துத்
தண்ணார் மதியணிந் தோன்றென் சுசிந்தையிற் றணுவையுள்
எண்ணார் பிறவிப் பெருங்கடல் நீந்துவ தென்றினியே. (13)

தாணுநாதன் இந்நாளனும் கருணைக்கடலாய்
விளங்குகின்றான் எனல்.

என்றும் புரந்தெமை யாள்வோன் சுசிந்தை யெனும்பதியில்
துன்றும் பெருகன்பி னுற்றேவ ரேத்தித் தொழுதிடுபோ
தன்றுந் திருவரு ளீந்தோ னவனியி லன்பருக்கே
இன்றும் பெருஞ்சீ ரருட்கட லாயரு ளீபவனே. (14)

அடியேனை உய்யக் கோள்வாயேனல்.

பவமே யெனுமென் கொடுவினை தீர்த்துன் பதமலர்க்காந்
தவமே புரியடி யாரொடு சேர்த்துநின் றண்ணளியால்
அவமே செலுத்தா தடியேனை யுய்யக்கொண் டாண்டருள்வாய்
சிவமே சுசிந்தைப் பதியமர் தாணுச் செழுஞ்சுடரே. (15)

அஷ்டமூர்த்தியாகிய தான் அடியார்பொருட்டுத்
திருமூர்த்தி யுருவாய் விளங்குவனெனல்.

செழுஞ்சுட ரோரிண் டான்மாவைம் பூதமுஞ் சேர்தவெட்டுக்
கொழுஞ்சுடர் மூர்த்தியை யோகியர்க் கன்றிக் குணிப்பரிதல்
தொழுஞ்சுடர் மேனித் திருமூர்த்தி யாகிச் சுசிந்திரத்தில்
எழுஞ்சுடர்த் தாணு வடியவ ரேத்த இருப்பவனே. (16)

அடியார்க்குக் குருவாய் வந்தருள்வனெனல்.

இருப்பன வோடியிங் கானின்ற ஞாலத் திருபொருளும்
விரிப்பெரும் பூதங்க ளாதிய தோன்றி விரிந்தொடுங்கும்
தெரிப்பரு மேகப் பரம்பொரு ளென்னுமச் சிற்சொருப
விருப்புடை யோர்க்கருள் வான்குரு வாய் தாணு மெய்ந்
நிலையே. (17)

தாணுநாதன் திருலீலை இணையதேனல்.

மெய்யறி வானந்த மேயுரு வாகி விளங்குபரன்
மையறு பூமணம் வண்ணமோர் மூன்றும் மருவியல்போற்
செய்குறு முத்தொழில் மூவரு வாகித் திருவருளால்
பொய்யற நோக்கிற் சிவதாணு லீலை புரிகின்றதே. (18)

தாணுநாதனைத் தேரிசித்த அடியாரெய்தும் பயன்.

புரிகின்ற தின்னருள் தன்னடி யார்க்குப் பொலிவதனம்
மருநின்ற வொண்மலர்ச் செங்கர மீயும் வரதபையந்
தருநின்ற சோலைச் சுசிந்தையிற் றாணு சரணமலர்
திருநின்ற சீரும் அழிவற்ற முத்தியுஞ் சேர்த்திடுமே. (19)

அடியேனை அடியார் குழுவோடு சேர்த்தருள்வாயெனல்.

சேர்ப்பா யெனையுன் பழவடி யாரொடு திப்பவநோய்
தீர்ப்பாய் மலரடி யென்றலை சூட்டித் திருக்கடைககண்
பார்ப்பாய் சுசிந்தைப் பதியுறை தாணுப் பரஞ்சுடரே
போர்ப்பாய் கரியுரி போர்நந்தி யூர்ந்திடும் புண்ணியனே. (20)

தாணுநாதன் திருவடிகளை நாடினோர் அடையும் பயன்.

புண்ணியம் நற்புக ழின்னரு ளென்றும் பொலிந்திடுமுற்
பண்ணிய பாவப் பழிநீங்கும் நற்றிருப் பண்படையும்
எண்ணிய யாவு மினிதுவந் தெய்து மெழிற்சுசிந்தை
நண்ணிய தாணு மலரடி போற்றியுள் நாடினர்க்கே. (21)

தாணுநாதன் தன்னை மறவாத வுறவுடையோர்பால்
வந்தருள்வன் எனல்.

நாட்டற் குரிய சிவதாணு வென்றுயர் நான்மறைகள்
தேடக் கரந்துநற் பாலினெய் போலத் திகழ்பவனைக்
கூடக் கருதி யுறவெனுங் கோல்நட்டுக் கூருணர்வாம்
நீடற் கயிற்றான் முறுகக் கடைவர்முன் நிற்பவனே. (22)

இப்பாமாலையை திருவடிக் கேற்றருள்வா யெனல்.

நின்று மிருந்துங் கிடந்தும் நடந்துமுன் நிற்பணியும்
துன்று மடியவர் சொன்மாலை கொண்டருள் தூயவனே
மன்றுள் நடன மணியே சிவதாணு மாலயனே
நன்றுன் மலரடிக் கென்னுரை மாலை நயந்தருளே. (23)

திருமாலுக்குச் சக்கரமருளிய தன்னோடு
மாலயனும் திகழநிற்பாயெனல்.

நயனங்கள் மூன்றுடை நாயக பால்நிறை நற்கடலிற்
சயனங்கொள் வோனொரு கண்மலர் நிற்பதந் தானணிய
வயனுந்து மாழி யருள்தாணு வேதிரு மாலயனைப்
புயல்தங்கு கோயிலின் மூலத்தி லொன்றாய்ப் புனைபரனே.
(24)

தாணுநாதனையே போற்றுவா மெனல்.

பரனை மறைப்பொருள் நால்வர்க்கு முன்னாட் பரிந்துரைத்த
அரனை யரியை யயனையம் முத்தொழி லாற்றிடுசங்
கரனைக் கடுக்கை மலரைப் புனைந்தமுக் கண்ணனைமுப்
புரனை யெரித்த சுசிந்தையிற் றாணுவைப் போற்றுதுமே. (25)

சிவதாணுநாதன் திருக்கோயில்நிலை
இனைய வேனல்.

போற்றுஞ் சுசிந்தைப் பதிவட பாலிற் புகழ்மருங்கை
தோற்றும் மருத்து மலையுங் குமரியும் சொற்குணபால்
மேற்றிசை வேள்வி மலையுறுந் தென்பால் வியன்பறக்கை
நீற்றொளிர் மேனிச் சிவதாணு கோயில் நிலையிதுவே. (26)

சிவதாணுநாதன் திருவுருவின்நிலை இனையவேனல்.

நிலையுறு மேதென் சுசிந்தைப் பதியினின் நீளுருவம்
தலையுறு மேதண் மதிகொன்றை கங்கையுந் தாழ்சடையும்
மலையுறு மங்கை யுறமொரு பாதியின் மாபுரமெய்ச்
சிலையுறு மோர்பாற் சிவதாணு நாதன் திறமிதுவே (27)

தோழிக் கூற்று.

திருவார் சுசிந்தைப் பதியுறை தாணுச் செழுமணியே
மருவார் குழலியென் றோழிநின் மேன்மய லாய்க்கலைபோய்
பெருவான் றுயருறு முண்ணலள் தூங்கலள் பேரருளாற்
செருவான் புரஞ்செற்ற தேவே கனிந்திவட் சேர்த்தருளே (28)

திருப்பவனி கண்டிரங்கல்.

சேரும் புகழார் சுசிந்தையிற் றாணு திருமறுகில்
ஆரும் பவனி வரக்கண்டிப் பாவை யணிதுகிலே
சோரும் மதிமுகம் வேர்க்குந் துயருறும் துன்பொழித்துப்
பாருட் சிறந்த நலனுற நல்லருள் பாலிப்பையே. (29)

சிவதாணுநாதனே
எமக்கு நல்வாழ்வு அருள்வாயெனல்.

பாலே அமுதே யெனவுரு வாகிப் பகர்சுசிந்தை
மேலே அடியவ ருள்ளே யினித்திடும் மெய்ப்பொருளே
மாலே அயனே அரனே எமக்குநல் வாழ்வருள்வாய்
சேலேய் விழியுமை வண்டுண் டுறைசிவத் தேனுருவே. (30)

(சிவதாணு அந்தாதி முற்றுப்பெற்றது.)

# வாழ்த்து.

எண்சீரடி ஆசிரிய விருத்தம்.

சீர்கொண்ட சுசிந்தைநகர் கோயில் கொண்ட
சிவதாணு மாலயநின் திருத்தாள் வாழ்க
ஏர்கொண்ட வுமையாதி சத்தி வாழ்க
இபமுகனோ டாறுமுகன் இனிது வாழ்க
பேர்கொண்ட மான்மியப்பா மாலை வாழ்க
பெருமறையுந் தமிழ்மறையும் பெருகி வாழ்க
நீர்கொண்ட ஞாலமிசை அடியார் வாழ்க
நிலைகொண்ட திருவருளே நிறைந்து வாழ்க.

சுசிந்தைப் பிரபந்தம் மூன்றும்
முற்றுப்பெற்றது.



| பக்கம். | வரி. | பிழைகள். | திருத்தங்கள். |
|---|---|---|---|
| 14 | 24 | குறுணிவிநாயகர் | —முக்குறுணிவிநாயகர். |
| 18 | 2 | கிரந்தச்சுலோகம் | —மணிப்பிரவாளச்சுலோகம் |
| ,, | 16 | அரவணையினணையச் | —அரவணையணைச்சண் |
| ,, | 17 | சண்டேசனடராஜனை | —டேசனைத்தாண்டவேசன் |
| ,, | 18 | தருமிந்தமுறை | —தனையிந்தமுறை |
| 19 | 8 | ஐருவந்யம் | —ஐருவந்யம் |
| ,, | 14 | வந்யம் | —வந்யம் |
| 22 | 27 | திருவாரூர் | —திருவாரூரர் |
| 26 | 28 | இவ்வற்றால் | —இவ்வாற்றால் |
| 33 | 12 | அடிகள்யேத்தி | —அடிகளேத்தி |
| 12 | 24 | பேற்றி | —போற்றி |
| 39 | 6 | உரைத்தவப் | —உரைத்தபு |
| 50 | 8 | யென்றான் | —என்றான் |
| 54 | 22 | யென்று | —என்று |
| 55 | 31 | யேத்தினராய் | —ஏத்தினராய் |
| 64 | 15 | உயிர்முனிவன் | —உயர்முனிவன் |
| 72 | 3 | கன்னாபூண் | —கன்னிபூண் |
| 85 | 13 | விட்டலாமாராயன் | —விட்டலமாராயன் |
| ,, | 36 | தொழுந்தான் | —தொழுதான் |
| 89 | 6 | மழைபொழிந்திரதித் | —மழைபொழிந்திந்தத் |
| 106 | 5 | முனியன் | —முனிவன் |
| ,, | 28 | நெய்தீபம் | —நெய்த்தீபம் |